# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

## சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

*ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.*

*வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.*

## வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.


தொலைபேசி :
71231



*விவரங்களுக்கு :*

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—60 | மார்ச் 1980 | இதழ்—3

## பொருளடக்கம்

# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் பிரைமரி ஸ்கூல்

பேசின் பிரிட்ஜ் ரோடு, சென்னை—600 001

**பள்ளிக்கூட கட்டிட நிதிக்கு தாராளமாக நன்கொடை வழங்கக் கோருகிறோம்**



**கட்டப்பட்டு வரும் பள்ளியின் தோற்றம்**

பள்ளியின் புதிய கட்டிடத்தைக் கட்டி முடிக்கத் தேவைப்படும் தொகை ரூ 5 இலட்சமாகும். அதில் ஏற்கனவே இப்போது ரூ. 2 இலட்சம் செலவிடப்பட்டுள்ளது.

## நன்கொடை வழங்கியவர்களின் பட்டியல்

| | | ரூ. பை. |
|---|---|---|
| 1. | M/s. பவானி சாரிடபிள் டிரஸ்ட், சென்னை & திரு வி. பட்டாபிராமன் & அவரது குடும்பத்தினர் | 27,500 00 |
| 2. | திரு P. K. ராமன் | 20,000 00 |
| 3. | ஸ்ரீராமகிருஷ்ணா லாட்ஜிர், சென்னை | 1,000 00 |
| 4. | M/s. நிவேதியா எஜிகேஷனல் டிரஸ்ட், கல்கத்தா | 1,000 00 |
| 5. | திரு ஜி. வி. ராஜன் பாபு, சென்னை | 1,000 00 |
| 6. | திரு எஸ். ரங்கராஜன், சென்னை | 1,000 00 |
| 7. | டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன், பெங்களூர் | 1,000 00 |
| 8. | திரு B. M. திருநாராயணன், சென்னை | 1,000 00 |
| 9. | திரு எஸ். ஆராவமுதன், சென்னை | 500 00 |
| 10. | திரு எஸ். கோபால் நாயுடு, சென்னை | 500 00 |
| 11. | மிஜார் கோவிந்தப்ப அன்னப்ப பாய் & அவரது புதல்வர்கள் | 500 00 |

| | | ரூ. பை. |
|---|---|---|
| 12. | திரு வி. நாதமுனி | 500 00 |
| 13. | திருமதி பார்வதி ஸ்ரீநிவாசன், சென்னை | 500 00 |
| 14. | M/s. ரங்கநாதன் செட்டியார், சென்னை | 500 00 |
| 15. | M/s. ஏ. வெள்ளையப்ப முதலியார் & கோ | 500 00 |
| 16. | Alathur Nathamuny Chetty's Charities, Madras-5 | 501 00 |
| 17. | M/s. S. Ateendrooloo Chetty's Charities, Madras-1 | 501 00 |
| 18. | Olati Guruvajamma Charities, Madras-1 | 501 00 |
| 19. | திருமதி பவானி அம்மாள், சென்னை | 400 00 |
| 20. | M/s. ஏ. வி. இண்டஸ்ட்ரீஸ், புது தில்லி | 350 00 |
| 21. | M/s. ப்ரேம் என்ஜினிரிங் ஒர்க்ஸ், புது தில்லி | 350 00 |
| 22. | திருமதி இந்திரா பிரபு | 300 00 |
| 23. | Bysani Madhara Chetty's Charity Fund, Madras-1 | 251 00 |
| 24. | Elemek Corporation, Bombay | 251 00 |
| 25. | M/s. கிரோரிமல் காசிராம், சென்னை | 251 00 |
| 26. | Lighting Equipment Co., Madras | 251 00 |
| 27. | M/s. எஸ். வேலு & சன்ஸ், சென்னை | 251 00 |
| 28. | திரு ஜி. நாராயணசுவாமி, கல்கத்தா | 250 00 |
| 29. | Green Roadlines (Regd) Bombay | 250 00 |
| 30. | M/s. வி. ஜி. வாசன் & ப்ரதர்ஸ், சென்னை | 250 00 |

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் இந்தப் பணிகளுக்கு ரூ. 250 ம் அதற்கு மேலும் வழங்கப் பெறும் நன்கொடைகளுக்கு பிரிவு 80-G வருமான வரி சட்டத்தின்படி வரிவிலக்குச் சலுகை உண்டு.

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி

## ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் ஊஞ்சல் சேவை

ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் எல்லாக் குணங்களையும் அவஸ்தைகளையும் கடந்து விளங்குகிறார். அவர் அவற்றால் பாதிக்கப்படவில்லை; அவைகள் அவரைப் பாதிக்கவும் முடியாது. ஆனால், பக்தர்கள் அந்த ஒப்பற்ற பரம்பொருளைத் தங்கள் உள்ளத்திலேயே உணர்ந்து அனுபவிக்கிறார்கள். ஆகையால் பக்தர்கள், ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் எப்போதும் உற்சாக மாகவும் சந்தோஷமாகவும் கவலையற்றும் இருந்து, தங்களுக்கு எல்லாவிதமான சௌகரியங்களையும் சௌபாக்கியங்களையும் க்ஷேமங்களையும் கொடுத்துக்கொண்டிருக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள்.

இதுதான் திருமலையில் கண்ணாடி ஹால் எனப்படும் அயன மஹாலில் நாள்தோறும் நடத்தப்படும் ஊஞ்சல் சேவையின் தாத்பரியமாகும். இந்தச் சேவை ஒவ்வொரு நாளும் மாலையில் ஆறு மணிக்குப் பிறகு நடந்து வருகிறது. உற்சவமூர்த்தி அழகாக அலங்கரிக்கப்பெற்ற ஊஞ்சலில் தம் தேவிமார்களுடன் எழுந்தருளுகிறார். கந்தம், சாமர உபசாரங்கள், வேதபாராய ணம், பஜனை ஆகியவற்றுடன் ஸ்வாமி லேசாக ஊஞ்சல் ஆடுகிறார்.

மேற்கண்ட ஊஞ்சல் சேவை உற்சவத்தில் பங்குகொள்ள விரும்பும் கிருகஸ்தர்கள் ரூ. 1000 செலுத்தித் தங்கள் குடும் பத்தில் ஆறு பேர்களுடன் இந்த உற்சவத்தில் கலந்துகொள்ள லாம். அவ்விதம் உற்சவத்தில் பங்குகொள்ளும் கிருஹஸ்த ருக்கு ரூ. 250 பெறுமானமுள்ள தங்க டாலரும் வஸ்திர வெகுமதியும் அளிக்கப்படும்.

எக்ஸிக்யுட்டிவ் ஆபீசர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

—திருமூலர்


| தொகுதி 60 | சித்தார்த்தி ஞு பங்குனி மீ | இதழ் 3 |
| --- | --- | --- |





किं प्रागसंस्तुत इति प्रतिपन्नमूलः,
छायं गतश्रमरुजं न तरुः करोति ॥

கிம் ப்ராகஸம்ஸ்துத இதி ப்ரதிபன்னமூல:
சாயம் கதச்ரமருஜம் ந தரு: கரோதி ।

—தீனாக்ரந்தனம்-35

மரம் நிழலைத் தந்து தன்னை அண்டியவர்களின் சிரமத்தைப் போக்குகிறது. தன் நிழலை அடைந்தவனை, 'நீ என்னிடம் முன்பு பழகாதவன், உனக்கு நிழலைத் தர மாட்டேன்' என்று மரம் சொல்லுகிறதா? அதுபோல், ஹே காசி விச்வேச்வரா! தங்களை முன்பு நான் ஸ்தோத்திரம் செய்யவில்லை என்ற காரணத்தினால் இப்போது சரண மடைந்த என்னைக் கைவிட மாட்டீர்கள் என்பது நிச்சயம் அல்லவா?

மன்னுபுகழ்க் கௌசலைதன்
    மணிவயிறு வாய்த்தவனே!
தென்னிலங்கைக் கோன்முடிகள்
    சிந்துவித்தாய்! செம்பொன்சேர்
கன்னிநன்மா மதிற்புடைசூழ்
    கணபுரத்துஎன் கருமணியே!
என்னுடைய இன்னமுதே!
    இராகவனே! தாலேலோ!

—குலசேகராழ்வார்



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

**சனிக்கிழமை, டிசம்பர் 27, 1884**

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** எவன் எதை நினைக்கிறானோ அதனுடைய தன்மையைப் பெறுகிறான். சிவனை வழிபடுபவன் சிவத்தன்மை பெறுகிறான். ஒரு ராமபக்தன் இரவுபகலாக அனுமனை நினைத்துக் கொண்டிருந்தான். தான் அனுமனாகவே மாறி விட்டதாக அவன் தன்னை நினைப்பது வழக்கம். கடைசியில் அந்தப் பக்தன் தனக்கு ஒரு சிறிது வால் முளைத்திருப்பதாக உறுதியாக நம்பினான்.

சிவன் தன்மையில் ஞானம் ஏற்படுகிறது. விஷ்ணு தன்மையில் பக்தி வருகிறது. சிவபக்தன் ஞானியின் சுபாவத்தைப் பெறுகிறான். விஷ்ணு பக்தன் பக்தனின் சுபாவத்தைப் பெறுகிறான்.

ம—: சைதன்யதேவரிடம் ஞானம், பக்தி ஆகிய இரண்டுமே இருந்ததாகத் தாங்கள் கூறினீர்களே!

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (சிறிது கோபத்துடன்): அவருடைய விஷயமே தனி. அவர் கடவுளின் அவதாரம். அவருக்கும் சாதாரண ஜீவனுக்கும் உள்ள வேறுபாடு மிகமிகப் பெரிது. அவருடைய நாக்கில் சார்வபௌமர் சர்க்கரையை வைத்த போது, அது கரைந்து போவதற்குப் பதிலாக ஆவியாக மேலே கிளம்பிச் சென்றது—அப்படிப்பட்ட ஒரு தீவிர வைராக்கியம் சைதன்யரிடம் இருந்தது. அவர் எப்போதும் சமாதியிலேயே ஆழ்ந்திருந்தார். அவர் காமத்தின்மீது எத்தகைய மகத்தான வெற்றி கண்டிருந்தார்! அவரையா சாதாரண மனிதர்களுடன் ஒப்பிட்டுப் பார்ப்பது! மாமிசத்தைப் புசித்தாலும் சிங்கம் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் குட்டி போடும். குருவி தானியத்தைக் கொரிக்கும். ஆனால் இரவுபகலாகக் காமத்தில் ஈடுபடும். அதுபோல அவதாரபுருஷருக்கும் சாதாரண மனிதனுக்கும் உள்ள வேறுபாடு இருக்கிறது. சாதாரண மனிதன் காமத்தைத் துறக்கிறான். என்றாலும் ஏதோ சில சமயம் நழுவி விடுகிறான்; அவனால் காமத்தைக் கட்டுப்படுத்த முடிவதில்லை.

(ம-விடம்) வெட்கம், வெறுப்பு, அச்சம், இந்த மூன்றையும் விலக்க வேண்டும். இவை எல்லாம் பந்தப்படுத்தும் பாசங்கள். எட்டுப் பாசங்களைப் பற்றி நீ கேள்விப்பட்டதில்லையா?

நித்தியசித்தன் உலக வாழ்க்கையைக் கண்டு ஏன் பயப்பட வேண்டும்? அவனுக்கு எப்படி விளையாட வேண்டும் என்பது நன்றாகத் தெரியும். உலக விளையாட்டைக் கண்டு அவன் பயப்படுவதில்லை. நித்தியசித்தன் விருப்பப்பட்டால் லௌகிக வாழ்க்கையைக்கூட நடத்த முடியும். கைதேர்ந்த யாரோ ஒரு சிலரால்தான் இரண்டு கத்திகளையும் ஒரே சமயத்தில் சுழற்றித் திறமையாக விளையாட்டுக் காண்பிக்க முடியும். அவர்கள்மீது எவரேனும் கல்லெறிந்தால் அந்தக் கல் கத்தியில் பட்டுக் கீழே தெறித்து விழும். அவர்களுடைய திறமை அப்படிப்பட்டது.

ஒரு பக்தர்: ஐயனே, எப்படிப்பட்ட நிலையில் பகவானின் காட்சியைப் பெற முடியும்?

**ஸ்ரீ ராமகிருஷ்ணர்:** முழு மனதையும் ஒன்று திரட்டிப் பகவானிடம் ஒருமுகப் படுத்தாவிட்டால் என்ன பயன் ஏற்படும்? பாகவதத்தில் சுகதேவரைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. அவர் நடந்து செல்லும்போது, இலட்சியத்தின் மீது ஒரே கவனமாக இருக்கும் ஒரு படைவீரனைப் போன்று நடந்து சென்றார். அவருடைய பார்வை இப்படி அப்படித் திரும்பவில்லை. அவருடைய பார்வைக்கு இறைவன் என்ற ஒரே ஓர் இலட்சியம் மட்டுமே இருந்தது. இதற்குத்தான் யோகம் என்று பெயர்.

சாதகப் பறவை மழைநீரை மட்டுமே அருந்தும். கங்கை, யமுனை, கோதாவரி மற்றுமுள்ள எல்லா நதிகளிலும் நீர் நிரம்பியிருந்தாலும், ஏழு கடல்களில்

நீர் இருந்தாலும், இவற்றில் சொட்டு நீரைகூடச் சாதகப்பறவை அருந்தாது. மழைப் பெய்யும் போது மேகத்திலிருந்து நேரிடையாக வரும் நீரை மட்டுமே அது அருந்தும். இப்படிப்பட்ட யோக நிலை எவரிடம் இருக்கிறதோ அவரால் இறைவனைத் தரிசிக்க முடியும்.

நாடகக் கொட்டகையில் திரை விலகாத வரையில் மக்கள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள். வீடு, அலுவலகம், பள்ளிக்கூடம் என்று பல விஷயங்களைப் பற்றி வம்பளந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் திரை விலகியவுடனேயே பேசுவது நின்றுவிடுகிறது. பிறகு நாடகத்தைப் பார்ப்பதிலேயே மிகுந்த கவனத்துடன் ஈடுபடுகின்றனர். நீண்ட நேரத்திற்குப் பிறகு யாராவது ஒருவர் இரண்டொரு வார்த்தை பேசினாலும் அது அந்த நாடகத்தைப் பற்றிய பேச்சாகத்தான் இருக்கும். குடிகாரன் குடித்து முடித்தபிறகு குடியின் ஆனந்தத்தைப் பற்றியே பேசுகிறான்.

நித்தியகோபால் ஸ்ரீராமகிருஷ்ணரின் அருகில் பேசாமல் மௌனமாக அமர்ந்திருந்தார். எப்போதும் அவர் பாவநிலையில் இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புடன்) : கோபால்! நீ ஏன் பேசாமலே இருக்கிறாய்?

நித்தியகோபால் (ஒரு குழந்தையைப் போல): எனக்...குத்... தெ...ரி...யா...து.

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** புரிகிறது. நீ ஏன் ஒன்றும் பேசமாட்டேன் என்கிறாய் என்பதைத் தெரிந்து கொண்டேன். ஏதாவது தவறு நேர்ந்து விடுமோ என்று பயப்படுகிறாய் போலும். ஆமாம், நீ நினைப்பது சரிதான். ஜய விஜயர் ஆகிய இருவரும் பகவான் நாராயணனின் வாயிற்காப்பாளர்களாக இருந்தார்கள். ஸனகர், ஸனாதனர் முதலிய ரிஷிகள் அங்கு வந்தபோது ஜயவிஜயர்கள் அவர்களை உள்ளே செல்ல அனுமதிக்கவில்லை. அந்தத் தவறு காரணமாகவே ஜய விஜயர்கள் மூன்று தடவை இந்த உலகில் பிறக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

இதுபோலவே ஸ்ரீதாமரைப் பற்றியும் வேறோர் உதாரணம் இருக்கிறது. ஸ்ரீதாமர் கோலோகத்தில் விரஜாவின்* வாயிற்காப்பாளராக இருந்தார். ஸ்ரீமதி ராதை கண்ணனைப் பார்ப்பதற்காக விரஜாவின் வீட்டிற்குள் செல்ல விரும்பினாள். ஆனால் ஸ்ரீதாமர் ராதையை உள்ளே செல்ல அனுமதிக்கவில்லை. எனவே ராதை, 'நீ பூலோகத்தில் அசுரனாகப் பிறப்பாயாக!' என்று ஸ்ரீதாமருக்குச் சாபம் கொடுத்தாள். ஸ்ரீதாமரும் அதற்குப் பதிலாக ராதைக்குச் சாபமிட்டார். (எல்லோரும் சிரித்தனர்.)

ஆனால் ஒரு விஷயத்தை நினைவில் கொள்ள வேண்டும்; குழந்தை தந்தையின் கையைப் பிடித்துக் கொண்டு நடந்தால், ஒருவேளை அது வாய்க்காலில் தவறி விழுந்தாலும் விழுந்துவிடும். ஆனால் தந்தையே குழந்தையின் கையைப் பிடித்துக்கொண்டிருந்தால், பிறகு அந்தக் குழந்தைப் பயப்படுவதற்கு என்ன இருக்கிறது? ஸ்ரீதாமரைப் பற்றியக் கதை பிரம்மவைவர்த்த புராணத்தில் இடம் பெற்றுள்ளது.

ஒரு பக்தர் : ஐயனே, பகவானின் குணங்களைப் பற்றி ஒருவன் தன் புத்தியினால் தெரிந்து கொள்ள முடியுமா?

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** சாதாரணமாகக் காணப்படும் இந்த புத்தியைக் கொண்டு ஒருவன் நிச்சயமாகப் பகவானின் குணங்களைத் தெரிந்துகொள்ள முடியாது. பகவானை ஒருவன் அவ்வளவு சுலபமாகத் தெரிந்துகொள்ள முடியுமா என்ன? ஒருவன் ஆத்மசாதனைகளைப் பழக வேண்டும். அத்துடன் அவன் குறிப்பிட்ட ஒரு மனோபாவத்தை (மனநிலையை)யும் கொண்டிருக்க வேண்டும். உதாரணமாக ஆண்டான் அடிமை என்ற தாஸபாவம் ஒன்று இருக்கிறது. பண்டைக்கால ரிஷிகள் சாந்தபாவத்தில் இருந்தனர். ஞானிகளின் மனநிலை என்ன தெரியுமா? அவர்களுடைய பாவம் தங்கள் உண்மைச் சொரூபமாகிய ஆத்மாவைத் தியானிப்பதாகும். (ஒரு பக்தனைப் பார்த்துப் புன்சிரிப்புடன்) உன்னுடைய பாவம் என்ன?

அந்தப் பக்தர் பதில் சொல்லாமல் மௌனமாக இருந்தார்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (புன்சிரிப்புடன்) : உன்னிடம் இரண்டுவித மனநிலைகள் இருக்கின்றன. நீ உன் உண்மைச் சொரூபமாகிய ஆத்மாவைத் தியானிக்கிறாய். அதோடு ஆண்டான் அடிமை என்ற தாஸபாவத்தையும் கொண்டிருக்கிறாய். என்ன, நான் சொல்வது சரிதானா?

பக்தன் (புன்சிரிப்புடன் தயங்கிக்கொண்டே) : ஆமாம், சரிதான் ஐயனே.

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (புன்சிரிப்புடன்): இதனால்தான் ஹாஸ்ரா என்னிடம், "உங்களால் மற்றவர்

* கோலோகம் என்பது ஸ்ரீகிருஷ்ணரின் நித்திய வாசஸ்தலமாகும். விரஜா என்பவள் கண்ணனின் தோழி.

களுடைய எண்ணங்களையெல்லாம் தெரிந்து கொள்ள முடிகிறது'' என்று கூறுகிறான். அவ்விதம் இரண்டுவித மனநிலைகளையும் சாதகன் ஒருவன் ஆன்மிக வாழ்க்கையில் மிகவும் முன்னேறி இருந்தால்தான் ஒரே சமயத்தில் கொண்டிருக்க முடியும். பிரகலாதன் அத்தகைய இரண்டு மனநிலைகளையும் கொண்டிருந்தான். ஆனால் இந்த நிலையை அடைய ஒரு சாதகன் ஆன்மிக வாழ்க்கையில் கடுமையாக உழைக்க வேண்டும்.

ஒருவன் முட்செடியின் ஒரு கிளையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருப்பதாக வைத்துக் கொள்வோம். அவனுடைய கையிலிருந்து இரத்தம் வடிந்தபடியே இருக்கிறது ஆனால் அவனோ, 'எனக்கு ஒன்றும் ஏற்படவில்லை; எனக்கு வலி இல்லை' என்று சொல்கிறான். அவனுக்கு ஏற்பட்டிருக்கும் காயத்தைப்பற்றி நீ விசாரித்தால், 'எனக்கு ஒன்றுமில்லை, நான் நன்றாகத்தான் இருக்கிறேன்' என்று அவன் கூறுகிறான். இவ்விதம் வலி இருக்கும் நிலையில் 'வலி இல்லை' என்று வெறும் வாயினால் சொல்லிக் கொண்டிருப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது? அத்தகைய உயர்ந்த இலட்சியத்தை அடைவதற்கு ஒருவன் ஆத்மசாதனைகள் பழக வேண்டும். *

# யோகவாசிட்ட சாரம்

திரட்டும் தமிழும்: எம். நாகசுப்பிரமண்யன்

1. எவன் பிரபஞ்சம் முழுவதும் உண்மையில் பிரம்மத்தைத் தவிர வேறில்லை என்று உணர்ந்து, பிரம்மம் என்ற கவசத்தை அணிந்து மிகவும் சாந்தமாக இருக்கிறானோ அவனே சம்சார மாயையிலிருந்து பாதுகாக்கப்படுகிறான், அவனே பரம சுகத்தில் திளைக்கிறான்.

2. ஒரு பிரம்மஞானி பவித்திர க்ஷேத்திரமாகிய காசியிலோ நாயைத் தின்னும் ஒரு புலையனின் வீட்டிலோ உடலை விட்டு விடலாம். அவரைப் பொறுத்த வரையில் இரண்டு இடங்களும் ஒன்றுதான். ஆசா பாசங்களைத் துறந்த அந்த ஞானி பிரம்மத்தை அனுபூதியில் உணர்ந்த அந்த க்ஷணத்திலேயே முக்தி பெற்றவர் ஆவார்.

3. எவன் உலகப் பொருள்களை விருப்பு வெறுப்பு இல்லாமல் நோக்குகிறானோ, ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பதைப் போல ஆத்மஞானத்தில் நிலை பெற்றபடியே உலகக் கடமைகளில் ஈடுபடுகிறானோ, அவனே விடுதலை அடைந்தவனாகக் கருதப்படுவான்.

4. ஓ ராமா, பற்றை அறுத்தவனுக்கு உலகம் பசுமாட்டின் குளம்புச் சுவடு போலவும், மேருமலை மண்மேடு போலவும், விரிந்து பரந்த ஆகாயம் குடத்தில் இருக்கும் காற்றுப் போலவும், மூன்று உலகங்களும் ஒரு புல்லிதழுக்குச் சமமாகவும் இருக்கின்றன.

5. மனம் சில விஷயங்களை ஏற்றுக்கொள்கிறது. மற்றும் விஷயங்களை ஏற்க மறுத்து விலக்கித் தள்ளிவிடுகிறது இதுதான் பந்தம். வேறு எதுவும் பந்தமில்லை.

6. மனம்தான் சம்சாரம். அதுவே பந்தமுமாகும். பெருங் காற்றினால் அசைந்தாடும் மரத்தைப்போல, இந்த மனித உடல் மனதினால் ஆட்டுவிக்கப்படுகிறது.

7. நாம் ஜயிக்க வேண்டிய தெய்வம் மனம் ஒன்றுதான். அதை ஜயித்துவிட்டால் மற்ற எல்லாவற்றையுமே முயன்று அடைந்து விடலாம். மனதை வெற்றி கொள்ளாமல் செய்யப்படும் ஏனைய முயற்சிகள் வீணாகிவிடும். (தமக்கு உரிய பலனைத் தர மாட்டா.)

8. மகான்களின் தொடர்பு, உள்ளத்தில் புதைந்திருக்கும் தீய இயல்புகளை விட்டொழித்தல், ஆத்ம விசாரணை, பிராணாயாமம் ஆகியவை மனதை வெற்றிகொள்வதற்கு உரிய வழிகளாகும்.

9. பரிசுத்தமான மனதினால் எவன் ஒப்புயர்வற்ற ஆத்ம ஞானத்தைப் பெருமுயற்சி செய்து அடைகிறானோ, மரணத்தை வென்றுவிடுகிறானோ, அவன் அனுபவிக்கும் பேரானந்தத்துடன் ஒப்பிடக் கூடியதாக எதுவுமே இல்லை.

10. ஓ ராமா, ஆத்மாவின் இயல்பை ஆராய்ந்து தெரிந்துகொள்ள முயற்சி செய்தல், அல்லது 'நான் யார்?' என்று தன்னைத் தானே கேட்டுக்கொள்ளும் கேள்வி—ஆகியவை மனதில் முளைக்கும் தீய மரத்தின் வித்துக்களைப் பொசுக்கும் நெருப்பாகும். *




# துளசிதாசரின் ராமர்

1

பகவான் சங்கரர் அதாவது சிவபெருமான் ஸ்ரீராமபிரானின் கதையைத் தமது உள்ளத்தில் எழுதி வைத்திருந்தார். தக்க சமயம் வந்தபோது அதை அவர் உமாதேவியாருக்குக் கூறினர். பகவான் சங்கரரின் மனதிலிருந்து தோன்றியதால் துளசி ராமாயணத்தை 'ராமசரித மானஸ்' என்று கூறுகிறார்கள்.

முதலில் எழுதிப் பிறகு அதை நடிகர்களைக் கொண்டு நடித்துக் காட்டுவது நாடகம் எனப்படு கிறது. சங்கர பகவான் எழுதிய இந்த நாடகத்தைத் தம் அசைவுகளால் ஸ்ரீராமபிரான் அபிநயித்துக் காட்டுகிறர். எனவே இது ஸ்ரீராமரின் லீலை எனப் படுகிறது. ஸ்ரீராமர் இவ்விதம் இத்தகைய லீலைகளைப் புரிய வேண்டும் என்ற நோக்கத்தோடுதான் சங்கரர் இதை எழுதியிருக்கிறர். கடவுளின் லீலைகளைக் கேட்டு நம்முடைய பிரமை (அறியாமை) அகன்று விடுகிறது.

முதன்முதலில் உமாதேவியாரிடம் கூறிய இந்தக் கதையைச் சங்கர பகவான் மகாபக்தனை காக புசுண்டிக்குக் கூறுகிறர். எனவே இந்த 'ராமசரித மானஸ்' எனப்படும் புனிதப் படைப்பைச் சங்கர பகவானின் வாயிலாகக் கேட்ட பெரும் பேற்றைப் பெற்றவர்கள், அகிலலோக நாயகியான உமாதேவி யாரும் மகாபக்தனை காகபுசுண்டியுமே ஆவார்கள்.

இறைவனின் நாடகத்தை லீலை என்றுகூடச் சொல்லலாம். பகவானின் அவதாரம் பற்றிய வர லாற்றைக் கேட்பதனல் மனிதன் சந்தேகம் என்னும் வலையில் விழ நேரிடுகிறது. ஆனல் பக வானின் லீலைகளைக் கேட்பதனல் மனிதனின் மன தில் எந்தவிதச் சந்தேகமும் எழாது.

நாடகத்தில் காட்சிகள் நடைபெற்றுக் கொண் டிருக்கும்போது, நடிகர்கள் சில சமயங்களில் தம் முடைய வசனத்தை மறந்துவிடுவதுண்டு. அப் போது அவர்களுக்கு வசனங்களை நினைவுபடுத்து வதற்காக மறைவிடத்தில் சிலர் (Promptors) இருப்பார்கள். இத்தகைய ஒரு நிலை கடவுளுக்கும் ஏற்பட்டதாக ராமசரிதமானஸ் பின்வருமாறு சுவைப் படக் கூறுகிறது :—

இந்தப் பூமியில் அவதரித்தவுடனேயே பகவான் தம் பாடங்கள் அனைத்தையும் மறந்து விடுகிறர். தாம் நடிக்க வேண்டிய பாகத்தை நடிகர்கள் மறக்கக் கூடாது. சிறிய குழந்தையாகப் பிறந்த வுடனேயே கடவுளுக்குத் தம்முடைய பாடம் மறந்து விடுகிறது.

பகவானைப் பார்த்து மனு கூறுகிறர்—''குழந்தை யாகப் பிறந்து விட்டீர்களே தவிர, பிறந்தவுடனே அழ வேண்டும் என்பதை மறந்து விட்டீர்களே! உங்களுடைய பாத்திரத்தின் இயல்பை நீங்கள் மறந்து விடலாமா? ''

பகவான்—என்ன, நான் அழ வேண்டுமா? பிடிவாதம் பிடித்துக்கொண்டு, கைகால்களை ஆட்டிக்கொண்டு அழ வேண்டுமா? அதுதான் என் நடிப்பிற்கு இலக்கணமா? நான் விதூஷகன்; என் னுடைய கடமை மக்களை மகிழ்ச்சியாக வைத்திருப் பதுதான்; அப்படி இருந்தாலும் நான் அழத்தான் வேண்டுமா?

துளசிதாசர் இந்த உரையாடலைக் கேட்டுக் கொண்டிருக்கிறர். அவருக்கு மனுவின்மீது ஆத் திரம் வருகிறது. எனவே அவர் மனுவைப் பார்த்து, ''நீதான் வாழ்நாள் முழுவதும் அழுதுகொண்டிருக் கிருயே! இன்னும் ஏன் பகவானையும் அழவேண்டும் என்கிருய்?'' என்று கோபத்துடன் கேட்கிறர்.

பக்தன்—நான் என்ன செய்வது?

துளசிதாசர்—நீ சிரி, பாடு. பகவானைப் பற்றிப் பாடிக்கொண்டே இருந்தால் ஹரியை அடையலாம்.

எவன் கடவுள் அழுகிறர் என்பதை அறிந்து அதைப் பக்திப் பரவசத்துடன் பாடுகிருனே அவன் நல்ல கதியை அடைந்து விடுகிருன்.

பகவான்—நீ ஏன் குற்றம் சுமத்துகிருய்?

பக்தன்—நாராயணனுக இருந்து கொண்டு தாங்கள் தங்களுடைய சுபாவத்தை மறந்து விட்டால் நாங்கள் வேறு என்ன செய்ய முடியும்? அரசன் எப்போது நாடகத்தில் பிச்சைக்காரன் பாத்திரத்தை ஏற்றுக் கொண்டு நடிக்க முற்படு கிருனே, அப்போதுதான் ஓர் அரசன் என்பதை முற்றிலும் மறந்து விட வேண்டும்.

பகவான்—எனக்கென்று எத்தகைய விருப்போ வெறுப்போ கிடையாது. எனக்கென்று பெயரும் கிடையாது, உருவமும் கிடையாது. பக்தன்தான் எனக்கு எல்லாவற்றையும் தருகிருன். எனக்கு என் பாடம் நன்ருக நினைவிருக்கிறது. ஆனல் அதற் கேற்ப நடிக்க விருப்பமில்லை.

மனு—தங்களைப் போன்ற ஒரு பிள்ளை வேண்டும்'

பகவான்—மிகவும் சாமார்த்தியமாக வரத்தைக் கேட்டுவிட்டாயே!

பகவானும் பக்தனின் வேண்டுகோளின்படி அவ னுடைய வீட்டிற்குப் பிள்ளையாக வந்துவிடுகிருர். பகவான் தமது விருப்பத்தின்படி எதையும் செய்வ தில்லை. அவர் எப்போதும் பக்தனுடைய விருப்பப் படியேதான் எல்லாக் காரியங்களையும் செய்கிருர்.

விசுவாமித்திரரின் வேண்டுகோளின்படிதான் இராமர் மிதிலையில் வில்லை நாணேற்றி முறிக்கிருர். கல்லைப் பெண்ணுக்குகிருர். தமது திருவடித் தாமரையிலிருந்த தூசியினுல் குருவின் கட்டளைப்படி அகலிகையை அவளுடைய சாபத்திலிருந்து விடுவிக்கிருர்.

சுயம்வர மண்டபம். ஜனக மகாராஜா சீதையின் சுயம்வரத்தில் ஏற்படுத்திய நிபந்தனையினுல் அவர் வைத்திருந்த வில்லை எடுத்து நாணேற்ற முடியாமல் அவமானப்பட்டுத் தங்கள் தலையைத் தாழ்த்திக் கொண்டு அநேக மன்னர்கள் வீற்றிருக்கிருர்கள்.

இவ்வளவு நேரமாகப் பொறுமையுடன் வீற் றிருந்த ஜனக மகாராஜா எழுந்து, "என்ன, இந்த உலகம் சுத்த வீரர்களே இல்லாமல் சூன்யமாகி விட்டதா?" என்று கேட்கிருர். அவர் சொன் னதைக் கேட்டதும் லட்சுமணன் கோபத்தால் கொதித்து எழுகிருன். அப்போதும் ஸ்ரீராமபிரான் பேசாமல் மௌனமாகவே அமர்ந்திருக்கிருர். குரு வாகிய விசுவாமித்திரர் இராமரின் பக்கம் திரும்பி "குழந்தாய் ராமா! எழுந்திரு. அந்த வில்லை முறித்து ஜனக மகாராஜாவின் துயரத்தைப் போக்கு!" என்கிருர். அதன்பிறகே இராமர் எழுந்து வில் இருக்கும் இடம் நோக்கிச் செல்கிருர். இது போலத்தான் பகவான் எப்போதுமே தாமாக எதையும் செய்வது கிடையாது.

சுயம்வர மண்டபத்தில் இராமர் வில்லின் அருகில் சென்று நிற்பதை அனைவரும் பார்க்கிருர்கள். திடீ ரென்று பெரிய ஓசை கேட்கிறது. அதன்பிறகுதான் இராமர் வில்லில் நாணேற்றியபோது அது உடைந்து விட்டது என்பதை அனைவரும் புரிந்து கொள்கிருர் கள். 'இராமர் எப்போது வில்லை எடுத்தார்? எப் போது நாணை ஏற்றினுர்?' என்பதையெல்லாம் மக்கள் பார்க்கவில்லை. அவ்வளவு விரைவாக இராமர் அதனைச் செய்து முடித்துவிட்டார். கம்பரும் இந்தக் காட்சியை, 'எடுத்தது கண்டனர், இற்றது கேட்டார்' என்று விளக்கியுள்ளது நோக்கத்தக்கது. துளசிதாசர் இதை வர்ணிக்கும்போது, "கடவுள் நிஷ்காம கர்மயோகி! பிறர் அறியாத வகையில் சேவை செய்யவே விரும்புகிருர்" என்று குறிப்பிடு கிருர்.

மனிதனும் அவ்விதமே நிஷ்காம கர்மயோகியாக இருந்து தொண்டு செய்ய வேண்டும். 'நான்தான் செய்கிறேன்' என்ற கர்வம் கூடாது. தொண்டு செய்பவனிடம் எந்தவிதமான ஆரவாரமும் இருக்கக் கூடாது.

'வில் முறிந்தபிறகு மணமாலையை ஏந்தி சீதை இராமபிரானை நோக்கி வருகிருள். நாணத்தினுல் தலை பூமியைப் பார்த்துக் கொண்டிருக்கக் கண் களில் நிறைந்த காதலுடன் வரும் சீதையைக் கண்ட பின்னரும் இராமர் எந்தவித அசைவும் இன்றி அதே போன்று காணப்படுகிருர். கண்ணேடு கண் நோக்கியபின் தலையை கவிழ்த்துக்கொள். இங்கேகூட சங்கேதம் தேவைப்படுகிறதா?'— என்பது இராமரின் மனநிலையை உணர்த்தும் துளசி தாசரின் சொல்லோவியமாகும்.

இந்த ராமலீலையைக் கேட்பதற்காக உமா தேவியார் (தக்ஷனின் மகள் தாக்ஷாயனியாகப் பிறந்தபோது) தமது உடலைத் தியாகம் செய்ய நேர்ந்தது.

ராம ராவண யுத்தம் நடந்துகொண்டிருக்கிறது. தலையைக் கொய்தபிறகும் ராவணன் இறக்கவில்லை. இதற்கான காரணத்தை உடனே இராமபிரான்

பக்தனுகிய விபீஷணனிடம் கேட்கிருர். என்ன செய்தால் ராவணன் இறந்து போவான் என்பதையும் இராமபிரான் பக்த விபீஷணனிடமே கேட்கிருர்.

அதற்குப் பதிலாக விபீஷணன், ''ராவணனுடைய வயிற்றில் அமிர்தகலசம் இருக்கிறது. அது காரண மாகவே அவன் உயிர் பெற்றுவிடுகிருன். தாங்கள் 31 பாணங்கள் விடவேண்டும். அதில் ஒரு பாணத் திஞல் அவன் வயிற்றிலுள்ள அமிர்தகலசத்தை வற்றச் செய்ய வேண்டும். பத்துப் பாணங்களைக் கொண்டு அவனது பத்துத் தலைகளைக் கொய்ய வேண்டும். மற்ற இருபது பாணங்களால் அவ னுடைய புஜங்களையும் துண்டிக்க வேண்டும்'' என்று சொல்கிருன்.

இவ்விதம் துளசிதாசரின் ராமர் பக்தர்களின் விருப்பத்திற்கேற்பக் காரியங்களைச் செய்கிருர். பக்தன் அவரைத் தன் விருப்பத்தின்படி ஆட்டு விக்கலாம். அவரைக் கட்டிப்பிடிக்கலாம். பக்தனின் அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையாக இராமபிரான் விளங்குகிருர்.

## 2

ஸ்ரீராமபிரானின் லீலைகளைத் துளசிதாசர் பின்வரு மாறு அழகாக வர்ணிக்கிருர் :—

இராமர் சிறுகுழந்தையாகத் தன் முழங்கால்களை மடித்துக்கொண்டு அழகாகத் தவழ்ந்து விளையாடிக் கொண்டிருக்கிருர். ஸ்ரீசங்கர பகவான் தமது இஷ்டதெய்வத்தைத் தரிசிப்பதற்காக சூட்சும சரீரத்துடன் அங்கு வருகிருர். தவழ்ந்து விளை யாடும் இராமரைக் கண்டு பரவசமடைகிருர் சங்கரர்.

சங்கர பகவானைக் கண்டதும் இராமர் சிரித்துக் கொண்டே, ''நாடகத்தைத் தாங்கள் எழுதினீர்கள். நான் அதன்படி நடிக்க வேண்டியிருக்கிறது. என் நடிப்பில் ஏதேனும் குற்றம் குறை இருந்தால் அதைச் சொல்லுங்கள்'' என்று கேட்கிருர்.

சங்கரர், ''எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. ஆனுல் ஒரே ஒரு குறைதான் காணப்படுகிறது. அதையும் நிவர்த்தி செய்துவிடலாம். அது என்ன வென்றுல், நான் நாடகத்தை எழுதும்போது, அதில் நான் தங்களைப் பார்க்க வரும் சமயத்தில் தாங்கள் மஞ்சள் நிறத்தில் சொக்காய் அணிந்து கொண்டு காட்சி தருவதாக எழுதியிருந்தேன். ஆனுல் இப்போது தங்களுடைய எல்லா அம்சங்களும் சரி யாக இருந்தும் இந்தச் சட்டை நீல நிறமாக இருப் பது ஒன்றுதான் எனக்குக் குறையாகப்படுகிறது'' என்கிருர்.

அப்போதுதான் இராமருக்கு நீல நிறச் சட்டை அணிவித்து அலங்காரம் செய்து விட்டுக் குழந் தையைச் சிறிது விளையாட விட்டுச் சென்றிருந்தாள் கோசலை. திடீரென்று இராமர் தன் கையை உதறிக் கொண்டு காலையும் உதைத்துக்கொண்டு பெரிய குரலெடுத்து அழ ஆரம்பித்தார். அவ்விதம் அவர் அழுவதைக் கேட்டுப் பயந்த கோசலையும் தாதிமார் களும் இராமர் இருக்கும் இடத்திற்கு ஓடோடியும் வந்தார்கள். என்ன என்னவோ கொடுத்து அவர்கள் குழந்தையைச் சமாதானப்படுத்தப் பார்த்தார்கள். ஆனுல் குழந்தையோ பிடிவாதமாக அழுதுகொண்டு கோசலையின் புடைவைத் தலைப்பைப் பிடித்து இழுத்துக்கொண்டு உடுப்புக்கள் வைத்திருந்த பெட்டிக்கு அருகில் அழைத்துச் சென்றது. அழுத படியே ராமர் ஜாடையின் மூலம் மஞ்சள் நிறச் சட்டையைக் காட்ட, பெற்றவளும் வியந்து அதை எடுத்துக் குழந்தைக்கு அணிவிக்கிருள். குழந்தை மறுபடியும் மகிழ்ச்சியுடன் தவழ்ந்து செல்கிறது. அதைக் கண்ட சங்கரரும் மிக்க மகிழ்ச்சியுடன் பகவானைப் பலவாறு போற்றித் துதித்துவிட்டுச் சென்றுவிடுகிருர்.

## 3

இவ்விதம் சிவபெருமான் சென்றபிறகு காக புசுண்டி பகவானைத் தரிசிக்க வந்தது. அதைப் பார்த்ததும் பகவான் சிரித்தார். பகவானின் லீலையைக் கண்டு மகிழ்ந்த காகபுசுண்டியிடம் இராமர், ''என்ன, நீயும் சங்கரபகவானிடம் கதையைக் கேட்டவனுயிற்றே! எல்லாம் அவர் கூறியபடியே சரிவர இருக்கிறதா? சிறிது நேரத் திற்கு முன்புதான் சங்கரர் வந்தார். அவரிடமும் இதுபோலவே கேட்டேன். அவர் என் சட்டையின் நிறம் மட்டும் சரியில்லை என்றுர். உடனே நான் இதோ என் உடையை மாற்றிக்கொண்டு வந்து விட்டேன். இப்போது நீ சொல். ஏதாவது குறை யாக இருக்கிறதா? '' என்று கேட்டார்.

காகபுசுண்டி—எல்லாம் நன்ருகவே நடந்து வரு கிறது.

பகவான்—குறை இருந்தால் சொல்லிவிடு. சங்கரர் வந்ததிஞல்தான் அவரது வேண்டுகோளை நிறைவேற்றுவதற்காக என் சட்டையை மாற்றிக் கொண்டேன். ஆகவே இப்போது எல்லாம் சரி யாக இருக்கிறதா என்று சொல்.

காகபுசுண்டி—நான் வரும்போது நீலநிற உடை யில் இருப்பதாக அல்லவா தாங்கள் கூறியிருந் தீர்கள்.

பகவான்— உம், மேற்கொண்டு சொல்!

காகபுசுண்டி—பகவானே, தாங்கள் அணிந்திருக்கும் சட்டையின் துணி தடிப்பாக இருக்கிறது. தடிமனான துணியினால் தங்கள் சட்டை தைக்கப்பட்டிருப்பதால், தங்களுடைய அழகு முழுவதையும் காண முடிவதில்லை. சௌந்தர்யத்தைக் காண வேண்டுமென்றால் நீலநிறத்துடன் இருக்க வேண்டுமல்லவா?

பகவான்—நீ என் உடலழகைக் காண்பதற்காக என் இந்தப் பீதாம்பரத்தை (மஞ்சள் உடையை)க் கழற்றிவிடவா?

காகபுசுண்டி—வேண்டாம்! அதைக் கழற்றிவிடாதீர்கள்! அந்தக் காரியத்தைப் பக்தர்கள் செய்யக்கூடாது. வேதாந்திகள் செய்யட்டும்!

[பீதாம்பரத்தை அகற்றுவது என்பது மாயை என்னும் திரையை விலக்குவதைக் குறிக்கிறது. பக்தனாகிய காகபுசுண்டி அந்த மாயை அறுபடுவதை விரும்பவில்லை. அது மாயையை விரும்புகிறது, மாயையை ஒப்புக் கொள்ளவும் செய்கிறது. ஆனால் அது திரை இவ்வளவு தடிப்பாக இருப்பதைத்தான் விரும்பவில்லை. பகவான் ஞானிகளுக்காக ஆபரணங்களைக்கூட அகற்றிவிடுகிறார்.]

பகவான் தமது பீதாம்பரத்தை அவிழ்த்து ஞானிகள் அமர்வதற்காகத் தரையில் விரித்து விடுகிறார்.

காகபுசுண்டி, "சம்சாரமாகிய உலகத்தின் திரை இவ்வளவு கெட்டியான துணியால் போடப்பட்டிருந்தால், மக்கள் தங்களை எப்படித் தரிசிக்க முடியும்? துணியின் தடிமனால் மக்கள் தங்களைத் தரிசிக்க இயலாமலே போய்விடுமே!'' என்று கேட்கிறது.

காகபுசுண்டியின் வேண்டுகோளை நிறைவேற்றுவதற்காக இராமர் மீண்டும் அழுது அடம் பிடித்து உடையை மாற்றிக்கொண்டு வருகிறார்.

இராமர்—என்ன காகபுசுண்டி, இப்போது சரியாக இருக்கிறதா?

காகபுசுண்டி—ஓ! இப்போதுதான் எல்லாம் சரியாக அமைந்திருக்கிறது.

பிறகு காகபுசுண்டியின் பிரார்த்தனைக்காக இராமபிரான் முழுங்காலிட்டுக்கொண்டு கால்களில் உள்ள சதங்கைகள் அதிர விளையாடிக் காகபுசுண்டியை மகிழ்விக்கிறார். காகபுசுண்டி கண் இமைக்கவும் மறந்து, அந்தப் பேரானந்தக் காட்சியைக் கண்டு திளைக்கிறது. நேரம் சென்று கொண்டிருக்கிறது. எவ்வளவுநேரம் ஒரு குழந்தையால் விளையாட முடியும்? இராமரின் கால்களும் கைகளும் வலிக்கத் தொடங்கின. குழந்தையின் சோர்வைக் கண்ட பிறகே காகபுசுண்டி மகிழ்ச்சியுடன் பகவானை வணங்கிவிட்டு விடைபெற்றுச் செல்கிறது.

[ராய்ப்பூர், ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் கிளையைச் சேர்ந்த ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர் நிகழ்த்திய ஆங்கிலச் சொற்பொழிவைத் தழுவி இந்த இதழின் விஜயதீபம் இடம் பெறுகிறது.]


## SRI RAMAKRISHNA VIJAYAM

### Form IV
(*See Rule 8*)

Statement about ownership and other particulars about SRI RAMAKRISHNA VIJAYAM (according to Form IV, Rule 8 circulated by the Registrar of Newspapers for India):

| | |
|---|---|
| 1. *Place of Publication* | Madras-600 004 |
| 2, *Periodicity of its Publication* | Monthly |
| 3. *Printer's Name* | R. Krishnaswamy |
| *Nationality* | Indian |
| *Address* | Sremati Printers<br>136, Mount Road, Madras-600 002 |
| 4. *Publishers' Name* | Swami Tanmayananda |
| *Nationality* | Indian (Hindu Monk) |
| *Address* | Sri Ramakrishna Math<br>Mylapore, Madras-600 004 |
| 5. *Editors's Name* | Swami Tanmayananda |
| *Nationality* | Indian (Hindu Monk) |
| *Address* | Sri Ramakrishna Math,<br>Mylapore, Madras-600 004 |
| 6. *Name & address of individuals who own the newspaper and partners or shareholders holding more than1% of the total capital* | Sri Ramakrishna Math<br>Mylapore, Madras-600 004 |

I, Swami Tanmayananda, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

(Sd.) Swami Tanmayananda
*Signature of the Publisher*

Date: 1-3-1980

# பதஞ்ஜலி யோக சூத்திரங்கள்

சுவாமி விவேகானந்தர்

8. விபர்யயோ மித்யாஜ்ஞானமத்தரூப ப்ரதிஷ்டம் ||

**விபர்யயம் (விபரீத அறிவு, மலைவு, திரிபுணர்வு) என்பது, ஒரு பொருளைப் பற்றிய உண்மையான சொரூபத்தில் நிலைத்திருக்காத பொய்யான அறிவாகும்.**

அடுத்த வகையான விருத்திகள், ஒரு பொருளை வேறொரு பொருளாகத் தவறாக நினைப்பதனால் ஏற்படுகின்றன. இது, ஒரு முத்துச்சிப்பியைப் பார்த்து அதை ஒரு வெள்ளித்துண்டு என்று நினைத்துக் கொள்ளுவதைப் போன்றதாகும்.

9. சப்தஜ்ஞானனுபாதீ வஸ்துசூன்யோ விகல்ப: ||

**(சொல்லுக்கு உரிய பொருத்தமான) பொருள் இல்லாதிருக்கும் நிலையில், வெறும் சொல்லைப் பின்பற்றி ஏற்படும் அறிவு விகல்பம் எனப்படும் 'சொல் மயக்கம்' ஆகும்.**

[வெறும் சொல்லிலிருந்து மட்டுமே ஓர் அறிவு நமக்கு உண்டாவதாகவும், ஆனல் அந்தச் சொல் குறிப்பிடும் பொருளின் இருப்புக்கு உண்மையிலேயே அங்கு இடமில்லை என்றும் வைத்துக் கொள்வோம். அத்தகைய அறிவு விகல்பம் அல்லது சொல்மயக்கம் என்று சொல்லப்படுகிறது.]

மனதில் தோன்றும் விருத்திகளில் விகல்பம் என்று மற்றொரு வகையான விருத்திகள் இருக்கின்றன. ஒருவர் ஒரு வார்த்தையைச் சொல்கிறார். அதனுடைய கருத்து இன்னது என்று நிதானமாக ஆராய்ந்து புரிந்து கொள்ளாமல், அந்தச் சொல்லைக் கேட்ட மாத்திரத்தில் உடனே நாம் ஒரு முடிவுக்கு வந்துவிடுகிறோம். இது சித்தத்தினுடைய பலவீனத்திற்கு அடையாளமாகும். இப்போது நீங்கள் அடக்கம் (ஸம்யமம், Restraint) என்றால் என்ன என்பதைப்பற்றிப் புரிந்துகொள்வீர்கள். ஒருவன் எவ்வளவுக்கு எவ்வளவு பலவீனனாக இருக்கிறானே அவ்வளவுக்கு அவ்வளவு அடக்கும் சக்தியும் அவனிடம் குறைவாக இருக்கும். இந்தச் சோதனையைக் கொண்டு உங்களை நீங்கள் எப்போதும் பரிசோதித்துப் பார்த்துக்கொள்ளுங்கள்.

நீங்கள் கோபப்பட இருக்கும் சமயத்தில் அல்லது துன்பப்பட இருக்கும் சமயத்தில் எதனால் அவ்விதம் தூண்டப்பட்டீர்களோ அதைப்பற்றி ஆராய்ச்சி செய்து பாருங்கள்; ஏதோ சில செய்திகளை நீங்கள் கேள்விப்படுகிற காரணத்தால் உங்கள் மனம் ஏன் அத்தகைய விருத்திக்கு உட்படுகிறது என்பதைப்பற்றி அலசி ஆராய்ந்து பாருங்கள்.

10. அபாவ — ப்ரத்யயாலம்பனா வ்ருத்திர் நித்ரா ||

**ஒன்றுமில்லை என்ற சூனிய உணர்ச்சியைப் பற்றுக்கோடாகக் கொண்ட விருத்தி 'நித்திரை' எனப்படும்.**

ஆழ்ந்த உறக்கமும் கனவும் (சுஷுப்தியும் சொப்பனமும்) அதற்கடுத்த வகையான விருத்திகள் என்று சொல்லப்படுகின்றன.

நாம் விழித்துக்கொள்ளும்போது, அதுவரையில் நாம் தூங்கிக்கொண்டிருந்தோம் என்பதை அறிந்து கொள்கிறோம். நாம் பார்த்த ஒரு காட்சியைப் பற்றி மட்டும்தான், அல்லது அனுபவித்த ஒன்றைப் பற்றி மட்டும்தான் நமக்கு ஞாபகம் (நினைவு, ஸ்மிருதி) ஏற்பட முடியும். நாம் பார்க்காத அல்லது அனுபவிக்காத ஒன்றைப்பற்றி ஒருபோதும் நாம் நினைப்பது இயலாத காரியம்.

ஏரியில் காற்றடிப்பது காரணமாகவோ கல்லை வீசுவது காரணமாகவோ ஏற்படும் எதிர்செயலுக்கு அலை என்று பெயர். அதுபோலவே மனம் என்ற ஏரியில் ஏற்படும் ஒவ்வோர் எதிர்ச்செயலும் விருத்தி என்ற அலையைத் தோற்றுவிக்கிறது. தூங்கிக் கொண்டிருக்கும் சமயத்தில் மனதில் அலைகள் இல்லாமல் இருக்குமானல், மனதிற்கு எந்தவிதக் காட்சியோ அனுபவமோ இருந்திருக்காது; அந்த நிலையில் கனவு இருந்தது என்றோ இல்லை என்றோ நமக்கு அறிவு ஏற்படாது; ஆகவே நாம் அவற்றை ஞாபகப்படுத்திக் கொள்ளவும் முடியாது. தூக்க நிலையை நாம் நினைவுபடுத்திக்கொள்ள முடிகிறது என்பதற்குக் காரணமே, தூக்கச் சமயத்திலும் மனதில் ஒருவகை அலைகள் (விருத்திகள்) இருந்தன என்பதுதான்.

நினைவு என்பது (ஞாபகம்) மற்றொரு வகையான விருத்தி ஆகும். அதற்குச் சம்ஸ்கிருதத்தில் 'ஸ்மிருதி' என்று பெயர்.

11. அனுபூதவிஷயா அஸம் ப்ரமோஷ :
ஸ்ம்ருதி : ||

**நினைவு அல்லது ஸ்மிருதி என்பது முன்பு அனுபவிக்கப்பட்ட ஸ்ருத்திகள் நழுவி விடாமல் இருந்து, ஸம்ஸ்காரங் களின் மூலமாக மீண்டும் உணர்வு நிலைக்கு (பிரக்ஞைக்கு) வருவதாகும்.**

பிரத்தியட்சமாக நேரிடையாக அறிந்து கொள்வ திலிருந்தும், மித்தியா (பொய்யறிவு) ஞானத்திலிருந் தும், சொல் மயக்கத்திலிருந்தும், தூக்கத்திலிருந் தும் நினைவு என்பது உண்டாகக்கூடும்.

உதாரணமாக, நீ ஒரு சொல்லைக் கேட்கிருய்' அந்தச் சொல் சித்தம் என்ற ஏரியில் வீசப் பட்ட ஒரு கல்லைப் போன்று ஆகிறது. அது சித்தத்தில் விருத்தி என்ற ஓர் அலையை உண்டுபண்ணுகிறது. அந்த அலை தொடர்ந்து ஓர் அலைவரிசையை எழுப்பி விடுகிறது. இதுவே நினைவு எனப்படுகிறது. இது போலவேதான் தூக்கத்திலும் நடைபெறுகிறது. தூக்கம் என்று சொல்லப்படும் ஒரு வகையான அலைவகை, சித்தத்தில் ஒரு நினைவு என்ற அலையை எழுப்பினுல், அப்போது அது கனவு என்று அழைக்கப்படுகிறது.

விழிப்பு நிலையிலே நினைவு என்று சொல்லப்படும் அலையின் மற்ருேர் உருவம்தான் கனவாகும். *



# ஜாபால உபநிஷதம்

'அண்ணு' சுப்ரமண்யம்

**ஜாபாலோபநிஷதத்தின் கருத்துக் கள் முழுவதும் ஆங்காங்கே சில விளக்கங்களுடன் இங்கே தரப் பெறுகின்றன.**

முன்னுரை

முக்திகோபநிஷதம் குறிப்பிடும் வரிசையில் ஈச—கேன முதலிய பத்து உபநிஷதங்களுக்குப் பிறகு பதினேராவதாகப் பிரம்ம உபநிஷதம் அமைந்திருக்கிறது. அதற்கடுத்துப் பன்னிரண்டா வதாக ஜாபாலோபநிஷதம் வருகிறது. 'பூர்ணமத:' என்று துவங்கும் சாந்திபாடத்தின் அடையாளத் தால், இது சுக்ல யஜுர்வேதத்தைச் சேர்ந்தது என்று அறியப்படும்.

இந்த உபநிஷதத்தைத் தொகுத்துக் கூறியவர் ஜாபால மகரிஷி ஆவார். எனவே இந்த உபநிஷ தம் ஜாபாலோபநிஷதம் என்ற பெயரைப் பெற் றுள்ளது.

இந்த உபநிஷதத்தில் ஆறு கண்டங்கள் அமைந் துள்ளன. முதல் கண்டத்தில் 'அவிமுக்தம்' என் றும் 'குருக்ஷேத்திரம்' என்றும் கூறப்படும் பிரம்ம ஸ்தானம் உடலிலுள்ள புருவமத்தி என்றும், அதை அறிந்தவனுக்கு அந்திம காலத்தில் ஸ்ரீருத்ரர் தாரக மந்திரத்தை உபதேசித்து முக்தியை அளிக்கிருர் என்றும் கூறப்படுகிறது.

இரண்டாவது கண்டத்தில், புருவமத்திதான் வாராணசி, அந்த இடத்தில் தியானிப்பதுதான் சந்தியாவந்தனம் என்று சொல்லப்படுகிறது.

மூன்ருவதில் ருத்ரஜபத்தின் பெருமை கூறப்படு கிறது. நான்காவது ஐந்தாவது ஆருவது கண்டங் களில், சன்னியாச லட்சணமும் பரமஹம்ச லட் சணமும் யாஜ்ஞவல்கிய மகரிஷியால் விளக்கப்படு கின்றன.

முதல் கண்டம்

பிருகஸ்பதி யாஜ்ஞவல்கியருக்கு உபதேசித்த தாவது :— பிராணனுக்குக் குருக்ஷேத்திரமும், உட லில் உறையும் பிரகாசமான இந்திரியங்களாகிய தேவர்களுடைய தேவ பூதாஸ்தானமும், எல்லாப் பிராணிகளுக்கும் பிரம்மஸ்தானம் எனப்படுவது மாகிய முக்கியமானது எது என்ருல், அதற்குப் பதில் 'அவிமுக்தம்' என்பதுதான். [அவிமுக்தம் என்பது அடுத்த கண்டத்தில் விளக்கப்படுகிறது.]

அவிமுக்தம்தான் பிராணனுக்கு முக்கிய ஸ்தான மாகிய குருக்ஷேத்திரமாகும் ; அதுவே இந்திரிய தேவதைகளின் தேவபூஜாஸ்தானமாகும் ; அது தான் எல்லாப் பிராணிகளும் முடிவில் அடைய வேண்டிய பிரம்ம ஸ்தானமாக விளங்குகிறது.

ஆகையால் ஒருவன் ஏதோ ஓர் இடத்திற்குச் சென்ருலும் அதையே குருக்ஷேத்திரம் (பிராணனு டைய ஸ்தானம்) என்றும், இந்திரிய தேவர்களின்

பூஜா ஸ்தானம் என்றும், பிராணிகள் அடைய வேண்டிய பிரம்ம ஸ்தானம் என்றும் கருத வேண்டும்.

ஒரு ஜீவனின் பிராணன் உடலைவிட்டுக் கிளம்பும் போது பகவான் ருத்ரர் அவிமுக்தத்தில் தோன்றி, அந்த ஜீவனுக்குத் தாரகப் பிரம்மத்தை உபதேசிப் பார். அதனுல் அந்த ஜீவன் சாகா நிலையை அடைந்து முக்தி எய்தும். யாஜ்ஞுவல்கியரே! அது அப்படித்தான். பகவத்சொரூபியான யாஜ்ஞு வல்கியரே! அது அப்படித்தான் என்பதே முடிவாகும்.

இரண்டாவது கண்டம்

இந்த யாஜ்ஞுவல்கியரிடம் அத்ரி மகரிஷி பின் வருமாறு கேட்டார்: — "அளவு கடந்ததாகவும் வெளிப்படையாகத் தோன்றுததாகவும் உள்ள இந்த ஆத்மா எனப்படுவது எதுவோ, அதை நான் எப்படி அறிந்துகொள்ள முடியும்?"

அந்தக் கேள்விக்கு யாஜ்ஞுவல்கியர் பின்வரு மாறு பதில் கூறினுர்:— அதை அறிந்துகொள்வ தற்கு அவிமுக்தம் என்று உபாசிக்க வேண்டும். அளவுகடந்ததாகவும் வெளிப்படையாகத் தோன்று ததாகவும் உள்ள இந்த ஆத்மா எனப்படுவது எதுவோ அது அவிமுக்தத்தில் நிலை பெற்றுள்ளது.''

அந்த அவிமுக்தம் எந்த இடத்தில் நிலையாக இருக்கிறது என்று கேட்டால், 'வரணு'விற்கும் 'நாசி'க்கும் மத்தியில் நிலையாக இருக்கிறது என் பது பதிலாகும். அந்த வரணு எது என்றுல், இந்திரியங்கள் செய்யும் எல்லாப் பாவங்களையும் தடுக்கிறது (வாரயதி) என்பதனுல், அது வரணு ஆகிறது. அந்த நாசி எது என்றுல், இந்திரியங்க ளெல்லாம் செய்யும் பாவங்களை நாசம் செய்கிறது என்பதனுல் அது நாசி ஆகிறது. அதனுடைய ஸ்தானம் எது என்றுல், புருவங்களும் நாசியும் கூடும் இடம் எதுவோ அதுவாகும். இந்த இடமே இந்த உலகிற்கும் மேலுலகிற்கும் ஸந்தியான (கூடும் இடமாகிய) வானம் ஆகும். இந்த ஸந்தி யையே பிரம்மவித்துக்கள் ஸந்தியாவந்தனத்தில் உபாசிக்கிருர்கள். அப்படிப்பட்ட அவிமுக்தம் உபாசிக்கப்பட வேண்டும். எவர் இவ்விதம் அதை அறிந்தவரோ அவரே அவிமுக்தத்தைப் பற்றிய ஞானத்தை உபதேசிப்பார்.

[குறிப்பு: சிவபெருமானுகிய விசுவநாதர் கோயில்கொண்டிருக்கும் காசி க்ஷேத்திரம் வார ணசி என்றும் அவிமுக்தம் என்றும் சொல்லப்படு கிறது. அது எல்லாப் பாவங்களையும் போக்கும் ஒப்பற்ற க்ஷேத்திரமாக விளங்குகிறது. அந்த க்ஷேத்திரம் நமது உடலில் புருவ மத்தியில் இருப்ப தாக அறிந்து தியானிக்க வேண்டும். அதுவே ஞானிகளின் சந்தியாவந்தனமாகும். அது இல் லாமல் முக்தி கிடையாது. 'எவன் அசையாத மன தாலும் யோகத்தின் வலிமையாலும் புருவ மத்தியில் பிராணனைச் செவ்வையாக நிலைநிறுத்தித் தியானிக் கிருனே, அவன் பிரகாசம் பொருந்திய அந்தப் பரம புருஷனை அடைகிருன்' என்று பகவத்கீதை (8-10) கூறுகிறது.

ஒரு ஜீவனின் பிராணன் உடலைவிட்டுக் கிளம்பும் போது நெற்றிக் கண்ணனுகிய ருத்ரர் அங்கே தோன்றி அந்த ஜீவனுக்குத் தாரகப் பிரம்ம மந்தி ரத்தை உபதேசித்து உய்விக்கிருர் என்ற புராணக் கருத்து, வாரணசியில் யோகிகளால் பிரத்தியட்ச மாகப் பார்க்கப்படுகிறது என்பதும், அவிமுக்தம் என்ற புருவமத்தியில் தியானிப்பதால் பரமசிவ னுடைய அருள் சித்திக்கும் என்பதும், அதனுல் முக்தி என்பதும் உள்ளடங்கிய கருத்தாகும்.]

மூன்ருவது கண்டம்

யாஜ்ஞுவல்கியரிடம் அவரது சீடர்களாகிய பிரம்மசாரிகள், ''எதை ஜபம் செய்வதனுல் ஒருவன் அமரத்துவம் அல்லது சாகாநிலை என்ற முக்திப் பதவியை எய்துவான் என்பதை உபதேசியுங்கள்'' என்று கேட்டார்கள்.

அதற்கு யாஜ்ஞுவல்கியர் கூறிய பதில் வருமாறு:— ''சதருத்ரீய ஜபத்தால் ஒருவன் முக்திப் பதவியை எய்துவான். (ருத்ரத்தில் அடங்கிய சிவநாமங்க ளாகிய) இவையே சாகாத் தன்மையின் நாம தேயங்கள் ஆகும். அவற்றை ஜபிப்பதனுலேயே நிச்சயமாக ஒருவன் சாகாநிலை எய்திய முக்த னுவான்.''

[குறிப்பு: ஸ்ரீருத்ரம் 'ருத்ரோபநிஷத்' என்றும் சதருத்ரீயம் என்றும் சிறப்புப் பெயரைப் பெற்றிருக்கிறது. அதில் சிவபஞ்சாக்ஷரீ மந்திரம் இடம் பெற்றுள்ளது. யஜுர்வேத சாகைகள் நூற் றென்றிலும் வேறுபல வேதசாகைகளிலும் இது படிக்கப்படுவதனுலும், நூற்றுக்கணக்கான வடிவங் களில் ருத்ரன் இங்கே போற்றப்படுவதனுலும் ஸ்ரீருத்ரம் 'சதருத்ரீயம்' எனப் பெயருடைய தாகும்.]

(அடுத்த இதழில் முடியும்)




# இதுவன்றே பொறுமை!

நரேந்திரன்

கீதகோவிந்தம் என்றதுமே நமக்கு ஸ்ரீ ஜயதேவரின் நினைவு வரும். அவர் சிறந்த பக்தர். ஒரு சமயம் ஜயதேவர் தீர்த்தயாத்திரை புறப்பட்டார். சிறந்த பக்தரும் புலமை மிக்கவருமாகிய ஜயதேவரின் வழிச்செலவிற்காக ஓர் அரசன் அவரை வரவழைத்துச் சிறந்த மரியாதைகள் செய்வித்து, நிறைய பணத்தையும் கொடுத்தான்.

அரசர் ஜயதேவருக்கு அளித்த பரிசில்களைப் பற்றிக் கேள்வியுற்ற சில திருடர்கள் பேராசை கொண்டு அவருடைய செல்வத்தைக் கவருவதற்காக அவருடன் வந்து சேர்ந்துகொண்டனர். ஜயதேவரோ பரமஞானி. இந்த லோபிகளின் எண்ணம் பற்றிய சிந்தனை அவருக்கு ஏன்? அவரோ பகவானை எண்ணித் துதிப்பாடல்களைப் பாடிக் கொண்டே சென்றுகொண்டிருந்தார். மக்கள் நடமாட்டம் அதிகம் இல்லாத ஓர் இடத்திற்கு வந்ததும் திருடர்கள் ஜயதேவரின் கையையும் காலையும் வெட்டி. ஒரு பாழுங்கிணற்றுக்குள் தள்ளிவிட்டு, அவரிடம் இருந்த செல்வத்தையெல்லாம் மூட்டையாகக் கட்டிக்கொண்டு சென்றுவிட்டனர்.

கிணற்றில் தண்ணீர் இல்லாததால் நினைவு திரும்பிய ஜயதேவர் மறுபடியும் பஜனை செய்யத் தொடங்கினார். அப்போது அந்த வழியாக, கௌடேச்வர அரசர் லக்ஷ்மணசேன் சேனையுடன் வந்தார். கிணற்றின் உள்ளிருந்து மனிதனின் குரல் வரவே அரசர் உடனே அங்கே நின்று ஆட்களை விட்டு ஜயதேவரை வெளியே எடுத்து வரச்செய்தார். அவரை அரண்மனைக்குக் கொண்டு சென்று சிகிச்சை செய்வித்தார். ஜயதேவரின் அறிவும் பக்தியும் அரசரை மிகவும் கவர்ந்தன. அவரைத் தம் ஆஸ்தானக் கவிஞர் ஆக்கியதுடன் குலகுருவாகவும் நியமித்துக் கொண்டார்.

அரசர் எவ்வளவோ தடவை கேட்டும் ஜயதேவர் தன் கை கால்களை வெட்டியது யார் என்று சொல்ல மறுத்துவிட்டார்.

ஒரு தடவை அரண்மனையில் ஏதோ ஒரு விழாவிற்காகப் பெரிய கொண்டாட்டம் நடைபெற்றது. மிகவும் அதிகமான எண்ணிக்கையில் பிச்சைக்காரர்களும் சாதுக்களும் அந்தணர்களும் சாப்பிட வந்தனர்.

அந்தக் கூட்டத்தினருடன், ஜயதேவரின் கையையும் காலையும் துண்டித்துப் போட்ட திருடர்களும் சாதுவேடத்தில் வந்திருந்தனர். குலகுருவாக முடமான ஜயதேவரைக் கண்டதுமே திருடர்களின் சப்தநாடிகளும் ஒடுங்கிவிட்டன. ஜயதேவரும் அவர்களைப் பார்த்ததுமே அடையாளம் தெரிந்துகொண்டார். அரசரை நோக்கி, ''மன்னா! என் பழைய நண்பர்கள் வந்திருக்கிறார்கள். உங்களுக்கு விருப்பமிருந்தால் அவர்களுக்குக் கொஞ்சம் பணம் கூடக் கொடுத்தனுப்பலாம்!'' என்றார்.

அரசர் திருடர்களை அருகில் அழைத்தார். திருடர்கள், 'சரி! இன்றுடன் நாம் தொலைந்தோம்!' என்று நினைத்துக்கொண்டே பயத்துடன் சென்றனர். ஆனால் அவர் களுக்குத் தங்கள் கண்களையே நம்ப முடியவில்லை. ஏனெனில் அரசரோ அவர்களை நன்கு உபசரித்து, மரியாதை செய்வித்து வேண்டிய அளவு பொன்னையும் அளித்தார். திருடர்கள் கூடிய விரைவில் அந்த இடத்தை விட்டு அகல எண்ணினர்கள். அரசரோ ஜயதேவரின் நண்பர்கள் என்று நினைத்து அவர்களுக்கு அதிகமான பொன்னையும் கொடுத்து, அவர்கள் ஜாக்கிரதையாக வீடு செல்வதற்காகச் சில வீரர்களையும் துணைக்கு அனுப்பி வைத்தார்.

செல்லும் வழியில் இயற்கையாக ஏற்படும் ஆவலின் பேரில் ஒரு சேவகன் அவர் களிடம், "ஜயதேவருடன் உங்களுக்கு எந்த வகையில் தொடர்பு ஏற்பட்டது" என்று கேட்டான்.

திருடர்கள் மிகவும் மகிழ்ந்துவிட்டனர். ஒரு திருடன் கூறினன்—"நாங்கள் அனைவரும் ஒரே நாட்டில் அரசாங்க ஊழியர்களாக இருந்தோம். உங்கள் நாட்டில் எவன் பிரதான இடத்தில் வைத்துப் பூஜிக்கப்படுகிருனே அந்த ஜயதேவன் ஒரு சமயம் மிகவும் கேவலமான ஒரு காரியத்தைச் செய்யவே எங்கள் அரசர் அவனுக்கு மரண தண்டனை அளிக்கும்படி உத்தரவிட்டார். ஆனல் நாங்கள் மிகவும் நல்ல மனமுடைய வர்கள். அதனல் ஜயதேவனைக் கொல்ல மனமின்றி அவனது கைகளையும் கால்களை யும் மட்டும் வெட்டிவிட்டு ஒரு பாழுங்கிணற்றில் தள்ளிவிட்டோம். இவ்விதம் நாங்கள் அவனை உயிருடன் வாழவிட்டோம். எங்கே தான் செய்த காரியம் வெளியே தெரிந்து விடுமோ என்று பயந்துதான் ஜயதேவன் எங்களுக்கு இவ்வளவு மரியாதைகளைச் செய்துள்ளான்."

அந்தப் பொல்லாத திருடர்களின் அபாண்டப் பேச்சைக் கேட்கப் பரந்தாம னுக்கே பொறுக்கவில்லை போலும்! உடனே பூமி பிளந்தது. திருடர்கள் அனைவரும் அந்தப் பள்ளத்திற்குள்ளே வீழ்ந்தனர். அரசனின் ஆட்களுக்கு எவ்விதத் தீங்கும் நேரவில்லை. பிரமிப்பிலிருந்து விடுபட்ட வீரர்கள் பரிசுப் பொருள்களுடன் நாட்டிற்குத் திரும்பி, மன்னரிடம் நடந்தவற்றைக் கூறினர்.

ஜயதேவரின் காதுக்கு விஷயம் எட்டியது. அவருக்கோ மிகவும் வருத்தம் ஏற் பட்டது. அரசரிடம் ஜயதேவர் நடந்தவற்றை விவரித்தார். மேலும் அவர் அரசரிடம், "மன்னா! பாவம், மிகுந்த வறுமை தாங்காமல்தானே அவர்கள் அத்தகைய பாவத்தைச் செய்தனர்! செல்வம் கிடைத்தால் மனம் திருந்துவார்கள் என்று எண்ணியே நான் அவர் களுக்குப் பணம் கொடுக்கச் சொன்னேன். வறுமை தொலைந்தால் அவர்கள் பாவச் செயல்களைச் செய்யமாட்டார்கள் என்று நினைத்தேன். ஆனல் நான் எத்தகைய துர்ப் பாக்கியசாலி! என்னல் அல்லவா அவர்கள் அனைவரும் இறக்க நேரிட்டது? கடவுளே அவர்களை மன்னிக்கட்டும். பகவானே! அவர்களுக்கு நற்கதி கொடு" என்ருர்.

அனைவரும் ஜயதேவரின் பக்தியையும், தவற்றை மன்னிக்கும் பொறுமையையும் எண்ணிப் போற்றி வணங்கினர்.

ஜயதேவர் திருடர்களை மன்னிக்கும்படி பகவானிடம் பிரார்த்தித்த அந்த நேரத் தில், வெட்டப்பட்ட அவரது கைகளும் கால்களும் முன்னிலும் அதிகப் பொலிவுடன் தோன்றின என்று அவரது வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. ★

# ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர்



கே. பி. முகுந்த பிரபு

ஜகந்நாத மிச்ராவிற்கும் சசிதேவிக்கும் வங்காளத்தில் உள்ள நவத்வீபத்தில் 1486-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் பிறந்தார்.

தமக்குப் பதினெட்டு வயது நடந்துகொண்டிருந்தபோது ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் கயைக்கு யாத்திரை சென்றார். கயைக்கு யாத்திரை சென்று திரும்பியதும் அவரது வாழ்க்கையில் ஒரு பெரிய மாற்றம் ஏற்பட்டு ஸ்ரீ கிருஷ்ணரிடம் அவருக்கு அளவு கடந்த பக்தி பெருகியது.

தமது இருபத்துநான்காம் வயதில் தாய், மனைவி, வீடு அனைத்தையும் துறந்து சைதன்யர் சன்னியாசம் எடுத்துக்கொண்டார்.

பிறகு அவர் தென்னிந்தியாவிற்கும், காசி, மதுரை, பிருந்தாவனம் ஆகிய இடங்களுக்கும் யாத்திரை சென்றார்.

நாம சங்கீர்த்தனத்தால் வங்காளம், ஒரிஸ்ஸா, அஸ்ஸாம் முதலிய இடங்களில் அவர் விஷ்ணு பக்தியைப் புதுப்பித்துச் செழிக்கச் செய்தார். தமது வாழ்க்கையின் இறுதிப் பகுதியை ஒரிஸ்ஸாவிலுள்ள புரிக்ஷேத்திரத்தில் ஸ்ரீ ஜகந்நாதரின் திருவடிகளில் கழித்தார். ஸ்ரீ கிருஷ்ணனின் அவதாரமாகக் கருதப்படும் சைதன்யர் 1533-ஆம் ஆண்டு தமது நாற்பத்தேழாம் வயதில் மகாசமாதி எய்தினார்.

கௌடீய வைஷ்ணவத்திற்கு அக்காலத்தில் சைதன்யரே மிகப்பெரிய பிரதிநிதியாக விளங்கினார். மனிதன் முக்தி பெறுவதற்குப் பிரேமைப் பக்தியையே கௌடீய வைஷ்ணவம் போதிக்கிறது. 'பிரேமைப் பக்திக்கு இறைவனே ஊற்றுகத் திகழ்கிறான். பிரேமையின் மூலம் இறைவனை அடையலாம். கருணை, தயை முதலிய தெய்விகப் பண்புகளைப் பிரேமையின் மூலம் பெறலாம். ஸ்ரீ கிருஷ்ணனிடம் ராதை கொண்டிருந்த மிகுந்த பிரேமையை உதாரணமாகக் கொள்ள வேண்டும்' என்பது கௌடீய வைஷ்ணவத்தின் கருத்தாகும்.

இறைவனை வழிபடுவதற்குப் பல முறைகள் இருந்தாலும், அவற்றுள் கடவுளின் நாமத்தையும் அவரது விபூதிகளையும் பக்தி நிறைந்த இதயத்துடன் பாடுவதே மிகவும் முக்கியமானது என்பதை ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் தமது வாழ்வின் மூலம் விளக்கியுள்ளார்.

கங்கை தன் முழு வேகத்தோடு பெருக்கெடுத்து ஓடினால் எப்படி இருக்குமோ அதுபோன்று சைதன்யரின் உள்ளம் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவையே நோக்கியிருந்தது. அவரது பிரேமைப் பக்தியின் வேகத்தை எவராலும் எதனாலும் தடுத்து நிறுத்த இயலவில்லை. அவரது தொடர்பு காரணமாகச் சாதாரண மக்களும் தெய்விகப் பிரேமையின் உயர்ந்த நிலைக்கு உயர்த்தப்பட்டார்கள். தமது ஓர் உபதேசத்தினாலோ ஸ்பரிசத்தினாலோகூட ஆயிரக்கணக்கான மக்களை அவர் பிரேமைப் பக்தியைப் பெறச் செய்திருக்கிறார்.

சைதன்யர் துறவறம் பூண்டு தேசயாத்திரை சென்றுகொண்டிருந்தபோது, ஓர் ஆற்றங்கரையில் துணிகளைத் துவைத்துக் கொண்டிருந்த ஒரு வண்ணானைச் சந்தித்தார். சைதன்யர் அவனிடம் சென்று, "ஹரிஎன்று சொல்லுங்கள்" என்று கேட்டுக் கொண்டார். உடனே அந்த வண்ணான் தெய்விக ஆனந்தம் ததும்பும் நிலையில் பகவானின் புகழைப் பாடிக்கொண்டே ஆட ஆரம்பித்து விட்டான். இந்த அதிசயத்தைப் பார்ப்பதற்காக ஏராளமான கிராமவாசிகள் வந்தனர். அவர்களுக்கும் அந்த வண்ணானை ஸ்பரிசித்த காரணத்தினால் தெய்விகப் பிரேமை பொங்கியது. கிராம மக்கள் எல்லோருமே பல நாள்வரையிலும் பரவசம் பொங்க நாம சங்கீர்த்தனம் செய்தபடியே ஆடிக்கொண்டிருந்தார்கள். ஸ்ரீ சைதன்யரின் ஆன்மிகச் சக்தி அத்தகையதாக இருந்தது.

அந்நாளில் வைஷ்ணவர்களின் தலைவராக ஸ்ரீ அத்வைத ஆசாரியார் வங்காளத்தில் கருதப்பட்டார். அவரிடம் ஒரு சமயம் ஸ்ரீசைதன்யதேவர் பின்வருமாறு கூறினார்: "உங்களுடைய ஆழ்ந்த பக்திதான் என்னை இந்த உலகத்தில் அவதரிக்கும்படி நிர்ப்பந்தப்படுத்தியது. இந்த என் அவதாரத்தின் மூலம் மிகப் பெரிய பாவிகளுங்கூடப் பாவத்திலிருந்து விடுபடுவார்கள்; பிரேமைப்பக்தியும் தெய்விகமும் அவர்களை ஆட்கொள்ளும். பக்தியினால் என்னை எப்படி அடைவது என்பதை உலக மக்களுக்கு விளக்குவதற்காகவே நான் வந்திருக்கிறேன். அறிவுரைகளாலும் உதாரணத்தினாலும் என்னை எப்படி அடைவது என்பதை எல்லோருக்கும் சொல்லிக் கொடுப்பேன். உங்களுடைய எல்லா இதயங்களும் என்னைச் சிந்திப்பதிலேயே நிலைத்திருக்கட்டும்."

ஸ்ரீசைதன்யதேவர் லட்சக்கணக்கான மக்களின் இதயங்களை ஆட்கொண்டார். இந்த அற்புதத்தை அவர் தமது பிரேமைப் பக்தியினுல் சாதித்தாரே யன்றிப் பேச்சாற்றலால் சாதிக்கவில்லை. பகவான் புத்தரைப் போல, அவர் வீட்டையும் அருமை மனைவி விஷ்ணுப்ரியையையும் துறந்து, உலகை உய்விக்கச் சென்ருர்.

ஸ்ரீகிருஷ்ணரிடம் கோபியர் கொண்டிருந்த பக்தியே சைதன்யருக்கு முன்மாதிரியாக இருந்தது. அவர் தம்மை ராதையாகவே பாவித்து வாழ்ந்தார். அது காரணமாக, ராதையைப் போலவே கிருஷ்ணனைப் பிரிந்ததனுல் ஏற்பட்ட தாபத்தை உடலிலும் மனதிலும் அப்படியே அனுபவித்தார். ஆகாயத்தின் நீல வர்ணமும் குழலோசையும் கொடிகள் மலர்களுடன் இருக்கும் காட்சியும் அவருக்குக் கண்ணனை நினைவுபடுத்தியதால், அடிக்கடி தெய்விகப் பரவசத்தில் ஆழ்ந்து மெய்மறந்து கீழே விழுந்துவிடுவார். அவரது மனம் எப்போதும் கிருஷ்ணப் பிரேமையிலேயே லயித்திருந்தது. ஆகவே வேறு எந்தவித லௌகிக எண்ணங்களோ விபரீத எண்ணங்களோ அவரது உள்ளத்தில் புகவே இல்லை. எனவே இறைவனிடம் கொள்ளும் பக்தி எப்படி உறுதியாக இருக்க வேண்டும் என்பதைத் தமது போதனைகளாலும் வாழ்க்கையின் மூலமும் சைதன்யர் தெளிவாக விளக்கியுள்ளார்.

பக்தியைப் பற்றிப் பொதுவாக சைதன்யர் கொண்டிருந்த சில கருத்துக்கள் வருமாறு :—

"ஸ்ரீகிருஷ்ணனிடம் ஆழ்ந்த பக்தியைக் கொண்டிருப்பதுதான் வாழ்க்கையில் எல்லாவற்றையும்விட மேலான இலட்சியமாகும். கடவுள் பிரேமை சொருபம். மிகவும் உயர்ந்த வகையைச் சேர்ந்த பிரேமைக்குக் கடவுள் ஓர் உருவமாக விளங்குகிருர். அவரைப் பக்தியினுல்தான் அடைய முடியும். ஸ்ரீகிருஷ்ணரிடம் ராதை கொண்டிருந்த பக்திதான் பக்தியிலேயே மிகமிக உயர்ந்ததாகும். அஞ்ஞானிகளாகிய மக்கள் நினைப்பது போன்று, ராதையின் பக்தி காமத்திற்கு உட்பட்டதல்ல ; அது பரமாத்மாவிடம் ஜீவாத்மா கொள்ளும் அதி உன்னத அன்பாகும் ; அற்ப உடல் உணர்ச்சிகளையெல்லாம் கடந்து அப்பாற்பட்டிருக்கும் தெய்விக அன்பை ராதை கண்ணனிடம் கொண்டிருந்தாள்.

"ஒரு பக்தன் தனது உணர்ச்சிகளை எல்லாம், இடையருது ஓடிக்கொண்டிருக்கும் ஒரு வாய்க்காலைப் போன்று பகவானின் திருவடிகளை நோக்கிச் செலுத்த வேண்டும். பக்தனின் மனம் இறைவனிடம் ஒன்றிவிட வேண்டும். பக்தன் தனது சுபாவத்திற்கேற்ப, சாந்த பாவத்தையோ, தாஸ்ய பாவத்தையோ, ஸக்ய பாவத்தையோ, வாத்ஸல்ய பாவத்தையோ, ராதை கண்ணனிடம் கொண்டிருந்த மதுர பாவத்தையோ கைக்கொண்டு இறைவனுடன் தொடர்புகொள்ள வேண்டும். இவ்விதம் தகர்க்க இயலாத ஒரு பந்தத்தை ஸ்ரீகிருஷ்ணருடன் ஏற்படுத்திக்கொண்டு அவரை அடைந்துவிட வேண்டும்."

சைதன்யர் தமது சீடர்களைச் சதாகாலமும் இறைவனின் நாமத்தை ஜபித்துக்கொண்டிருக்கும்படி வலியுறுத்தினுர். சைதன்யர் அருளிய சில உபதேச மொழிகள் வருமாறு :—

"ஹரியின் நாமம் உதடுகளில் இருக்கட்டும். கடவுள் வேறு, அவருடைய நாமம் வேறு அல்ல; இரண்டும் ஒன்றே ஆகும். ராதையின் மனநிலையுடன் இறைவனின் நாமத்தை ஜபித்துக் கொண்டிருந்தால் முடிவில் இறைவனின் திருவடிகளை அடையலாம்.

"பக்தியின் மூலம் மிகவும் உன்னதமான ஆனந்தம் அடையப்பெறுகிறது. அந்த ஆனந்தத்துடன் ஒப்பிடும்போது கர்மயோகம் ஞானயோகம் ஆகியவற்றின் மூலம் அடையப்பெறும் பயன் மிகவும் அற்பம் என்றே சொல்ல வேண்டும். ஸ்ரீகிருஷ்ணனிடம் பக்தி கொண்டிருப்பதுதான் முக்கியமானது. பக்தி இல்லாத ஞானம் ஒருநாளும் முக்தியைத் தராது. ஆனுல் கிருஷ்ணபக்தி, ஞானம் இல்லாவிட்டாலும் முக்தியைக் கொடுக்கும்.

"பக்தர்கள் எனக்கு எப்படித் தொண்டு செய்கிருர்களோ அப்படியே நானும் அவர்களுக்குத் தொண்டு செய்கிறேன். என்னிடம் உனக்குக் கவர்ச்சி இருந்தால் எனக்கும் உன்மீது கவர்ச்சி இருக்கும் — என்று பகவான் கூறுகிருர். ஒருவனுக்கு உண்மையாகவே தீவிர பக்தி இருந்தாலன்றிப் பகவானுக்குத் தன்னிடம் அன்பு இருக்கும் என்று அவன் எதிர்பார்க்கக் கூடாது.

"மனப்பூர்வமாக ஒருவன் இறைவனின் திருவடிகளில் சரண் புகுந்தால் அத்தகையவனை இறைவன் நிச்சயம் காத்தருள்வார். அவ்விதம் இறைவனைச் சரண் புகுந்தவர்களால்தான் மாயையை வெல்ல முடியும். இந்த ஸ்தூல உடல் நாய்களுக்கும் நரிகளுக்கும் உணவாக ஆகப்போகிறது. அப்படிப்பட்ட இந்த உடலின்மீது பற்றுக்கொண்டு 'நான், எனது' என்ற அபிமானம் கொண்டிருப்பவர்களால் மாயையை வெல்ல முடியாது.

"ஒருவனுக்குப் பசியும் தாகமும் இருக்கும் போதுதான் உணவும் தண்ணீரும் அவனுக்குத்

தேவைப்படும். கடவுள், பக்தி என்ற தண்ணீருக்காகத்தான் தாகத்துடன் காத்திருக்கிறார். ஆதலால் அவரது திருவடிகளில் பிறழாத பக்தி என்ற தண்ணீர் நிரம்பிய பாத்திரத்தை அவருக்குக் கொடு.

"ஐந்து விதமான பாவனைகளைக் கொண்ட பக்தி மார்க்கத்தின் மூலம் பகவானைச் சுலபமாக அடைய முடியும். அந்த நிலையை உடலுணர்ச்சியை வென்ற தவசிகளாலும், அபாரமாகக் கற்றறிந்த பண்டிதர்களாலும்கூட அடைய முடியாது.

"எவன் புல்லைவிடப் பணிவாக நடந்துகொள்கிறானோ, எவன் மரத்தைப் போலப் பொறுமையாக இருக்கிறானோ, எவன் தன்னை அவமானப்படுத்துபவர்களுக்கும் மரியாதை காட்டுகிறானோ அவனே பகவானைத் துதிப்பதற்குத் தகுதி வாய்ந்தவன்.

"ஸ்ரீ கிருஷ்ணரை நாடுபவர்களுக்கு ஜாதி, குலம், வெளியாசாரம் முதலியவை பொருளற்றவை. முக்கியமாக இருக்கவேண்டியது பக்தி, பக்தி, பக்திதான். இந்தக் கலியுகத்தில் ஹரிநாமம்தான், ஹரிநாமம் மட்டுமேதான் முக்தியைக் கொடுக்கும். பக்தியைவிட வேறு உயர்ந்த பாதை இல்லை."

இவ்விதம் பிரேமைப் பக்தி என்ற பாதையை ஸ்ரீசைதன்யர் காட்டினார். வாழ்க்கையின் இலட்சியமாகிய இறைவனை அடைவதற்கு மக்கள் பின்பற்ற வேண்டிய உத்தமமான மார்க்கம் அது.

[ஸ்ரீசைதன்ய ஜயந்தியை முன்னிட்டு இந்த இதழில் இடம் பெறும் இந்தக் கட்டுரை 'Anjali' என்ற ஆங்கில நூலில் இடம் பெற்றுள்ள ஒரு கட்டுரையின் தமிழாக்கமாகும்.

**ANJALI,** Published by Gita mandir, Manipal, Price: Rs. 10.]

# செய்திகள்

● செங்கம், ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த மன்றம் செங்கத்திலுள்ள பெருமாள் கோவிலில் 26-1-80 ஆம் நாள் மாலை 7 மணிக்கு ஏற்பாடு செய்திருந்த பொதுக்கூட்டத்தில் ஸ்ரீமத் சுவாமி ராகவேசானந்தர் 'ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த இயக்கம்' என்ற தலைப்பில் உரை நிகழ்த்தினார்.

● திருவண்ணாமலையில் ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த மன்றத்தின் சார்பாக விக்டோரியா இந்து மத பாடசாலையில் 27-1-80ஆம் நாள் காலை 11 மணிக்கு நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் 'விவேகானந்தரின் வாழ்வும் பணியும்' என்ற தலைப்பில் ஸ்ரீமத் சுவாமி ராகவேசானந்தர் உரையாற்றினார்.

● ஆர்க்காடு ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த மன்றத்தில் 27-1-80ஆம் நாள் மாலை 5 மணிக்கு ஸ்ரீமத் சுவாமி ராகவேசானந்தர் 'விவேகானந்தர் அளித்த செய்தி' என்ற தலைப்பில் பேசினார்.

---

வரப் பெற்றோம்:

## ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

[வெளியிட்டோர்: ஸ்ரீலலிதாம்பிகை மாதர் சங்கம், பள்ளிப்பாளையம், S. O., ஈரோடு-638 006. விலை: ரூ. 1]

பிரம்மாண்ட புராணத்திலுள்ள ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தின் மூலத்தைத் தமிழில் பாராயணத்திற்குப் பயன்படும் வகையில் கையடக்கமாக இந்த நூலை வெளியிட்டிருக்கிறார்கள். சுருக்க உரையுடன் நாமாவளியும், ஸ்ரீலலிதாம்பா சுப்ரபாதம், ஸ்ரீலலிதாம்பிகை திருப்பள்ளியெழுச்சி ஆகியவை அனுபந்தமாகவும் இந்த நூலில் இடம் பெற்றுள்ளன.

## ஒழுக்க நெறிகள்

[ஆசிரியர்: வே. மு. மந்திரம், எம்.ஏ., பி.டி. வெளியிட்டோர்: காளி பப்ளிஷர்ஸ், 29, ராஜா பாதர் தெரு, சென்னை-600 017. விலை: ரூ. 2-25]

தெய்வபக்தி, தேசபக்தி, நல்லொழுக்கம் ஆகியவற்றின் அடிப்படையில் ஒன்பதாம் வகுப்பு மாணவர்களுக்காக இந்நூல் வெளிவந்துள்ளது. ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் உயர்நிலைப் பள்ளியின் தலைமையாசிரியராகிய வே. மு. மந்திரம் அவர்கள் தமது திரண்ட அனுபவத்தை இந்த நூலில் வழங்கியுள்ளார். இதில் 16 தலைப்புகளின் கீழ் பாடங்கள் தரப்பட்டிருப்பதுடன் 'இவற்றையும் அறிந்துகொள்' என்ற தலைப்பில் ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் பாடத்தில் வரும் கருத்துக்களுக்கு ஏற்ப, ஞானியரின் நல்லுரைகளும் வள்ளுவரின் குறள்கள் பலவும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

# துளசிதாசருக்கு ஒரு நினைவு மண்டபம்

சென்னை மயிலாப்பூரில் வாழ்ந்த திருவள்ளுவருக்குச் சென்னையிலேயே வள்ளுவர் கோட்டம் ஒரு நினைவு மண்டபமாகத் திகழ்கிறது. அதுபோன்று, காசியில் வாழ்ந்த கோசுவாமி துளசிதாசருக்குக் காசியில் ஒரு நினைவு மண்டபம் அமைந்திருக்கிறது.

காசியில் துளசிதாசர் வாழ்ந்த இடத்தில் 'துளசி மந்திர்' என்ற கோவில் இருக்கிறது. அது தவிர, துளசிதாசரின் நினைவாக 'துளசி மானஸ மந்திர்' என்ற ஒரு நினைவு மண்டபம் சமீப காலத்தில் கட்டப்பட்டிருக்கிறது. துளசி மந்திர், துளசி மானஸ மந்திர் ஆகிய இரண்டுமே துளசிதாசரின் நினைவுச் சின்னங்களாகக் காசியில் இருந்துகொண்டிருக்கின்றன என்று சொல்லலாம். அவற்றைப் பற்றிய விவரங்கள் இங்கு ஒரு கட்டுரையாகத் தரப்படுகின்றன.

## துளசி மந்திர்

காசியில் கங்கைக்கரையில் துளசிதாசர் வாழ்ந்த பகுதியை இப்போது 'துளசி கட்டம் (துளஸி காட்)' என்று அழைக்கிறார்கள். அங்கே துளசிதாசர் வாழ்ந்த அதே இடத்தில் துளசி மந்திர் அமைந்திருக்கிறது. இந்த இடத்தில்தான் அவர் தமது துளசிராமாயணத்தை எழுதி முடித்தார்.

துளசிதாசர் வாழ்ந்த இடத்தில், அதாவது இப்போது துளசி மந்திர் என்று அழைக்கப்படும் இடத்தில் துளசிதாசர் பிரதிஷ்டை செய்த இரண்டடி உயரமுள்ள ஸ்ரீ அஞ்சனேயர் சிலை உள்ளது. சிலையை அடுத்து அதே கருவறையில் துளசிதாசரின் உருவப்படம் வைத்திருக்கிறார்கள். அந்தப் படத்திற்குக் கீழே துளசிதாசர் பயன்படுத்திய பாதுகைகள் இருக்கின்றன. பாதுகைகளுடன், துளசிதாசர் கங்கையில் செல்வதற்குப் பயன்படுத்தி வந்த படகின் சிறுபகுதியாகிய ஒரு கட்டையை வைத்திருக்கிறார்கள். துளசி ராமாயணத்தின் கைப்பிரதிகளையும் இங்கே பாதுகாப்பாக வைத்திருக்கிறார்கள். கி.பி. 1680-ஆம் ஆண்டு இங்கே கங்கைக்கரையில் அஸிகட்டத்தில் துளசிதாசர் தமது உடலை உகுத்தார் என்பதைக் குறிக்கும் சுலோகம் ஒன்றையும் துளசி மந்திரில் சலவைக் கல்லில் பொறித்து வைத்திருக்கிறார்கள்.

துளசிமந்திர் கட்டிடத்தின் மாடியில் துளசிதாசர் பூஜை செய்த அறை இருக்கிறது. அங்கு ஸ்ரீ ராமர் சீதையுடன் லட்சுமணனுடனும் எழுந்தருளியுள்ளார்; ராம யந்திரமும் வைக்கப்பட்டிருக்கிறது.

## துளசி மானஸ மந்திர்

காசிக்குச் செல்லும் ஆயிரக்கணக்கான யாத்திரிகர்களைக் காந்தம்போல் கவர்ந்திழுக்கும் இடம் துளசி மானஸ மந்திர். இந்தக் கட்டிடத்தை முழுக்க முழுக்க சலவைக் கற்களைக் கொண்டே கட்டியிருக்கிறார்கள். வாசகர்கள் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் ஐந்து தலைப்புகளின்கீழ், துளசி மானஸ மந்திர் பற்றிய விவரங்கள் இங்கே தரப்படுகின்றன.

### 1. கட்டிடத்தின் வெளிப்புறம்

'அற்புதமானது என்று சொல்வதைத் தவிர வேறு விதமாக விளக்க முடியாது' என்று சொல்லத்தக்க ஓர் ஆலயமாக துளசி மானஸ மந்திர் விளங்குகிறது. பச்சைக் கம்பளம் விரித்தாற்போன்ற பச்சைப் பசேலென்ற புல்வெளியும், பூத்துக் குலுங்கும் பூஞ்சோலையும் சூழ, நவீனக் கட்டிடக் கலையின் சிறப்பிற்கு மகோன்னதமான எடுத்துக்காட்டாகத் துளசி மானஸ மந்திர் திகழ்கிறது.

அந்த ஆலயத்தை இடமிருந்து வலம் வருவதாக வைத்துக் கொள்வோம். அந்த நிலையில் நமது கண்களுக்கு முதன்முதலாகத் தென்படுவது ஓர் அரசமரம் ஆகும். அது உண்மையான அரச மரம்தான். அந்த அரச மரத்தின் கிளைகளுக்குக் கீழே ஒரு செயற்கை மலை காண்கிறது. அந்த மலையின் மீது அப்படிப்பட்ட ஓர் அற்புதக் காம்பீர்யத் தோற்றத்துடன் சிவபெருமான் நின்று கொண்டிருக்கிறார். கங்கை அவரது சிரசில் இருக்கிறாள். சற்றுத் தூரத்தில் பகீரதன் சிவபெருமானின் முன்பு கைகூப்பி நின்று கொண்டிருக்கிறான். இவை 'கங்காவதரணம்' என்ற புராண நிகழ்ச்சியை விளக்கும் வண்ணச் சிலைகளாகும்.

அந்த இடத்தைக் கடந்து செல்கிறோம். சிமெண்டால் செய்த பெரிய ஒரு ராக்ஷஸ ஆமையின் வாயிலிருந்து தண்ணீர் கொட்டிக் கொண்டிருக்கிறது. அந்தத் தண்ணீர் தேங்கிய குளத்தில் நின்று கொண்டிருக்கும் யானையின் சிலையைப் பார்க்கிறோம். அந்த யானை நிஜ யானையைப் போன்று பெரிதாக அமைந்திருக்கிறது. மகாவிஷ்ணு முதலையைக் கொன்று கஜேந்திரனுக்கு மோட்சம் வழங்கியதை அங்கே கண்டு களிக்கிறோம்.

அடுத்து, இராமபிரானின் திருவடிகள் பட்டு அகல்யை மோட்சம் பெற்றதை உணர்த்தும் சிலை களை வைத்திருக்கிறார்கள். அந்த இராமபிரானின் எழில் இதை எழுதும்போது இப்போதும் கண்ணில் நிற்கிறது.

அதைப் பார்த்துவிட்டு அழகிய பூஞ்சோலையின் இடையில் அமைந்த அந்தக் கலைக்கூடத்தை வலம் வருவதைத் தொடர்கிறோம்.

இப்போது ஆலயத்தின் வலப்புறத்திற்கு வந்து விட்டோம். இங்கு ஒரு செயற்கைக் குளம் காணப் படுகிறது. அதன் கரையில் சிவபெருமான் தியான நிலையில் அமர்ந்துள்ள சிலை தத்ரூபமாக உள்ளது. அந்தக் குளத்தின் அருகே ஒரு செயற்கைக் குன்று அமைந்திருக்கிறது. குன்றின் மீது ஏறிச் சென்று நந்தியைக் கடந்து சந்நிதியை அடைகிறோம். அங்கே சலவைக்கல்லில் தாமரையை ஆவுடையா ராகக் கொண்டுள்ள சிவலிங்கத்தைத் தரிசிக்கிறோம். சலவைக் கல்லாலான நடராஜப்பெருமானையும் சந்நிதியில் காண்கிறோம். அங்குள்ள அர்ச்சகர் சந்தனப்பொட்டு வைத்துத் தீர்த்தப் பிரசாதம் தரு வதைப் பெற்றுக்கொண்டு வெளியே வருகிறோம்.

உள்ளும் புறமும் முழுக்க முழுக்கச் சலவைக் கற் களைக் கொண்டே இழைக்கப்பெற்ற ஆலயத்தை வலம் வந்துகொண்டிருக்கும் நாம், வெளிப்புறச் சுவரில் ஆங்காங்கே சலவைக் கற்களினால் இராமா யணக் காட்சிகள் இழைத்திருப்பதைக் கண்டு மகிழ் கிறோம்.

துர்க்கைக்குத் தனியாக அமைந்த சந்நிதிக்குச் செல்கிறோம். அத்துடன் ஆலயத்தை வலம் வரு வது முடிந்துவிடுகிறது.

**2. உட்புறம் அமைந்த ஹால்**

ஆலயத்தின் முகப்பிற்கு வந்துவிட்டோம். அங்கு 'சத்தியநாராயண துளசி மானஸ மந்திர்' என்ற இந்தக் கட்டிடத்தை நிர்மாணித்தவரைப் பற்றியும் அதற்குக் காரணமாக இருந்தவர்களைப் பற்றியும் தெரிந்து கொள்கிறோம்.

எழிலார்ந்த இந்த ஆலயம் ரத்தன்லால் சுரேகா என்ற ஒரு சீமானால் நிர்மாணிக்கப் பெற்றதாகும். அவர் தமது பெற்றோரின் நினைவாக இதைக் கட்டி யுள்ளார். ரத்தன்லாலின் தந்தையான கோவிந்த ராமின் உருவம் ஆலயத்தின் நுழைவாயிலின் வலப் புறத்தில் பூஜைக்கு அமர்ந்திருக்கும் நிலையில் சல வைக் கல்லில் காண்கிறது. நுழைவாயிலின் இடப் புறத்தில் ரத்தன்லாலின் தாயான பாகீரதிதேவி ஜப மாலையைக் கொண்டு ஜபிப்பதில் ஈடுபட்டிருக்கும் உருவத்தைச் சலவைக் கல்லில் காண்கிறோம். அங்கே சலவைக் கல்லில் பதிக்கப்பெற்றுள்ள அறி விப்புப் பலகையிலிருந்து பின்வரும் மூன்று விவரங் களைத் தெரிந்து கொள்கிறோம் :— 1. இந்த ஆல யத்திற்கு 15—2—1960 ஆம் நாள் திங்கட்கிழமை யன்று அடிக்கல் நாட்டப்பட்டது. 2 17—1—1964 ஆம் நாள் வெள்ளிக்கிழமையன்று இங்கே தெய்வப் பிரதிஷ்டை நடந்துள்ளது. 3. இந்தக் கட்டிடம் முன்னாள் ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர் களால் 29—11—1964 ஆம் நாள் முறைப்படி திறந்து வைக்கப்பட்டது.

'சத்தியநாராயண துளசி மானஸ மந்திர்' என்பது தான் துளசிதாசருக்கு அஞ்சலி செலுத்தும் வகை யில் எழுந்துள்ள இந்தக் கட்டிடத்தின் முழுப்பெய ராகும். எனினும் பொதுவாக 'துளசி மானஸ மந் திர்' என்றே இதைச் சுருக்கமாக வழங்குகிறார்கள்.

நுழைவாயிலைக் கடந்து உள்ளே சென்றால், சுமார் ஐந்நூறு பேர் அமரத்தக்க பெரிய ஹால் வரு கிறது. அங்குள்ள சந்நிதியில் ஸ்ரீராமர், சீதை, லட்சுமணன் ஆகியோர் அருள் பாலிக்கிறார்கள். ஸ்ரீ ஆஞ்சனேயரும் அங்கு இராமபிரானை வணங்கும் நிலையில் இருக்கிறார். ஸ்ரீராமரை வணங்கிவிட்டு அங்கு அர்ச்சகர் தரும் துளசிதளம், மலர், தீர்த்தப் பிரசாதம் ஆகியவற்றைப் பெற்றுக்கொள்கிறோம். அந்த இராமர் சந்நிதிக்கு இடப்புறத்தில் ஸ்ரீ அன்ன பூரணியும், அந்தப் பெருமாட்டியிடம் பிக்ஷை ஏற் கும் நிலையில் சிவனும் கோயில் கொண்டுள்ளனர். ஸ்ரீராமர் சந்நிதிக்கு வலப்புறத்தில் மகாவிஷ்ணுவும் மகாலட்சுமியும் அருள் பொழிகிறார்கள். மூன்று சந்நிதிகளிலும் உள்ள விக்கிரகங்கள் யாவும் சல வைக்கல் மூர்த்திகள். அந்த மூன்று சந்நிதிகளை யும் வலம் வரும்போது தசாவதாரக் காட்சிகளைப் பார்த்துக்கொண்டே வருகிறோம்.

மூன்று சந்நிதிகளையும் வலம் வந்தாயிற்று. அந்தச் சந்நிதிகளின் எதிரில்தான் அந்தப் பெரிய ஹால் அமைந்துள்ளது. அந்த ஹாலில் நின்று அண்ணாந்து பார்க்கிறோம். தலைக்கு மேலே ஆங் காங்கே பெரிய யானைத்தலை உருவங்கள் காணப் படுகின்றன. அந்த யானைகளின் துதிக்கையிலுள்ள தாமரைமலரில் மின்சார பல்புகளைத் தொங்க விட்டிருக்கிறார்கள். அவ்விதம் அந்த ஹாலில் உள்ள பன்னிரண்டு யானைகளின் துதிக்கையி லிருந்து வரும் ஒளி, ஹாலை ஒளி வெள்ளத்தில் மூழ்க அடித்திருக்கிறது.

அந்த ஹாலிலும் அந்தக் கட்டிடத்தின் முதல் மாடியிலும் உள்ள உட்புறச் சுவர்களின் நான்கு பக்கங்களிலும் துளசி ராமாயணம் முழுவதையும் பொறித்து வைத்திருக்கிறார்கள்.

கீழே உள்ள ஹாலிலும் சரி, மேல் மாடியிலும் சரி, துளசி ராமாயணம் முழுவதையும் பொறித்திருப்ப தோடு ஆங்காங்கே ராமாயணக் காட்சிகளையும் பொன்னிற உலோகத்தின் வண்ணத்தில் பொறித் திருக்கிறார்கள். கீழே ஹாலில் உள்ள சுவர்களில் இவ்விதம் பத்துக் காட்சிகள் இடம் பெற்றுள்ளன. அவற்றிற்கு கீழே இந்தியிலும் ஆங்கிலத்திலும் விளக்கம் எழுதப்பட்டுள்ளது. அந்தக் காட்சிகள் வருமாறு :—

1. ஸ்ரீராமபிரானின் பாதுகைகளைப் பரதன் ஏற்றுக் கண்களில் ஒற்றிக் கொள்கிறார். ஸ்ரீராமரும் சீதையும் கல்லின்மீது அமர்ந்துள்ளனர். அவர் களின் அருகில் லட்சுமணன் நின்றுகொண்டிருக் கிறார். ஒரு மானும் மயிலும் அருகே நின்று கொண் டிருக்கின்றன. 2. ஸ்ரீராமரும் சீதையும் நடுவில் இருக்கிறார்கள். அவர்களைச் சுற்றிலும் கணபதி, சிவன், பார்வதி, ஆஞ்சநேயர், ஒரு ரிஷி, சரஸ்வதி ஆகியோர் உள்ளனர்.

3. அக்கினிதேவனை வணங்கும் தேவர்களையும், முனிவர்களையும், பிராம்மணர்களையும் இங்கு நாம் பார்க்கிறோம். 4. மகாவிஷ்ணுவின் முன்னால் ஒரு பெண் வணங்கும் நிலையில் இருக்கிறாள்.

5. ஸ்ரீராமபிரான் சுமார் பன்னிரண்டு வயதுப் பாலகனாகக் காணப்படுகிறார். அவர் தமது மூன்று சகோதரர்களுடன் பம்பரம் விட்டுக்கொண்டிருக் கிறார். 6. மானையும் மயிலையும் காண்பதுபோல் பாசாங்கு செய்துகொண்டு இராமரைச் சீதை பார்க் கிறாள். ஆனால் வில் அம்புகளுடன் கூடிய இராமரின் பார்வை எங்கோ இருப்பதாகத் தெரிகிறது. அவர் சீதையைப் பார்க்கவில்லை.

7. கைகேயி மனம் மாறி அவள் கோபம் கொள்ள வேண்டும் என்பதற்காக, படுக்கையில் அமர்ந்திருக்கும் கைகேயிக்கு மந்தரை தூபம் போடு கிறாள். 8. இராமரும் சீதையும் தேரில் அமர்ந் துள்ளனர். லட்சுமணன் தேரில் நிற்கும் நிலையில் இருக்கிறார். தேர்ப்பாகன் குதிரைகளை ஓட்டுகிறான். ஆண்களும் பெண்களும் தாடியுடன் கூடிய முதியோரும் தேரைப் பின்தொடர்கிறார்கள். சிலர் தேரைப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள்; சிலர் அழுகிறார்கள்; சிலர் கைகூப்பி நிற்கிறார்கள். தேருடன் குடிமக்களும் இராமரைப் பின்தொடர் வதாக அமைந்துள்ள இந்தக் காட்சி உருக்கமாக இருக்கிறது.

9. படகில் இராமரும் சீதையும் அமர்ந்துள்ளனர். அவர்களின் அருகில் கைகளைக் கட்டிக்கொண்டு லட்சுமணன் நிற்கிறார். இராமரின் கால்களுக்கு அருகில் பாதுகை உள்ளது. குகன் இராமரின் திரு வடிகளைக் கழுவுகிறான். 10. பரதன் சோர்ந்து போய் அமர்ந்திருக்கிறார். அவருக்குச் சேவகன் ஒருவன் விசிறிக்கொண்டிருக்கிறான். இரண்டு அமைச்சர்கள் உள்ளனர். ஒரு முனிவர் மக்களின் நலனுக்காகப் பரதனிடம் பல அறிவுரைகளை வழங் குகிறார்.



கீழ் ஹாலில் உள்ள ராமாயணக் காட்சிகள் பத்தையும் பார்த்துக்கொண்டே வந்துவிட்டோம். மேலே மாடிக்குச் செல்லும் படிகளில் ஏறுவதற்கு முன்பாக வலப்புறத்தில் துளசிதாசரை அலங்கார விளக்குகளுக்கிடையில் காண்கிறோம். (முதன்முத லில் ஹாலில் நுழையும்போதே இடப்புறத்தில் துளசிதாசர் நமது கவனத்தைக் கவர்கிறார். வசதிக் காக இங்குக் கடைசியாகக் குறிப்பிட்டிருக்கிறேன்.) கறுத்த தாடியுடன் துளசிதாசரின் அந்த வண்ணச் சிலை முழு உருவத்தில் அமைந்துள்ளது. மேலே மாடியில் நாம் பார்க்கப்போகும் மின்விசையில் இயங்கும் பொம்மைகளுக்கு ஒரு மாதிரி போன்று துளசிதாசரை இங்கே காண்கிறோம். இங்குள்ளவை அனைத்தும் மின்விசையில் இயங்குகின்றன. எனவே காலை மடித்து அமர்ந்திருக்கும் துளசிதாசர் தமது கையிலுள்ள துளசிராமாயணத்தை ஒவ்வொரு பக்கமாகத் தலையை ஆட்டிக்கொண்டே புரட்டிப் படிக்கிறார். அங்கு மட்டும் இலேசாக ஒலிக்கும்

துளசிராமாயண இசைத்தட்டின் ஒலி, துளசிதாசர் ராமாயணத்தைப் படித்துக்கொண்டிருப்பது போன்று இயல்பாக அமைந்திருக்கிறது.

அங்கே துளசிதாசரின் முன்னால் ஓர் அன்பர் நின்றுகொண்டு ஒரு பிடி பொரியைப் பிரசாதமாகத் தருகிறார்.

இப்போது துளசி மானஸ மந்திரில் துளசி தாசரைத் தரிசித்துவிட்டு மேலே மாடிக்குச் செல்கிறோம்.

துளசி மானஸ மந்திரில் மக்களைக் கவர்ந்திழுக்கும் முக்கியமான பகுதி இங்கே மாடியில்தான் இருக்கிறது. எனவே மக்கள் கூட்டமும் இங்கு அதிகமாகக் காணப்படுகிறது. ஆண், பெண், பாலர், வயோதிகர், படித்தவர், படிக்காதவர் என்று எல்லா வித மக்களையும் பரவசப்படுத்தும் 'மாயா ஜால உலகம்' இங்குதான் அமைந்துள்ளது. அதைக் குறித்தும் மேலும் சிலவற்றைக் குறித்தும் அடுத்த இதழில் நாம் பார்க்கப் போகிறோம். *

# செய்திகள்

● மதுரை, நாராயணபுரத்திலுள்ள 'ஸ்ரீராம கிருஷ்ண நினைவு ஆய்வு நிலையமும் மருத்துவ நிலையமும்' [Sri Ramakrishna Memorial Research Centre& Hospital, Narayanapuram, Madurai-625 014] என்ற அமைப்பின் சார்பாக 20-1-80ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீமத் சுவாமி விவேகானந்தரின் 117ஆவது ஜயந்தி விழா கொண்டாடப்பட்டது. அதை முன்னிட்டு அன்றைய தினம் ஸ்ரீராமகிருஷ்ண நினைவு ஆய்வு நிலையத்தில் சுவாமி கமலாத்மானந்தர் ஒரு நாள் அந்தர்யோகம் நடத்தினார்.

● மதுரை மீனாட்சியம்மன் கோவிலில் திருவள்ளுவர் கழகத்தில் 20-1-80ஆம் நாள் இரவு 7 மணி முதல் 8-30 வரை டாக்டர் எஸ். சண்முகம் F.R.I.C.S. அவர்களின் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் 'விவேகானந்தரின் தெய்விக வாழ்க்கையும் ஞான முரசும்' என்ற தலைப்பில் சுவாமி கமலாத்மானந்தர் உரை நிகழ்த்தினார். ஸ்ரீமத் விவேகானந்த ஜயந்தியை முன்னிட்டுத் திருவள்ளுவர் கழகம் இந்த நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்தது.

● ஸ்ரீவில்லிபுத்தூரில் ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த மன்றத்தின் சார்பாக, திரு கே. ரங்கநாதன் அவர்களால் பெரிதும் பக்தி சிரத்தையுடன் 1-10-79 விஜயதசமியன்று துவக்கப்பெற்ற 'ஸ்ரீராமகிருஷ்ணர் லக்ஷ ஹோமம்' 26-1-80ஆம் நாள் சனிக்கிழமை நிறைவுபெற்றது. அன்று பகல் 10-30 முதல் 12 மணி வரை நடைபெற்ற 'ஸ்ரீராமகிருஷ்ணர் ஹோமம்' பூர்ணாஹுதியுடன் முடிவடைந்தது. அதைத் தொடர்ந்து பிரசாத விநியோகம், மகேசுவர பூஜை ஆகியவை நடந்தேறின.

இந்த ஸ்ரீராமகிருஷ்ண லக்ஷ ஹோமம் பூர்த்தி விழாவை முன்னிட்டு ஸ்ரீவில்லிபுத்தூர் பென்னிங்டன் நூல் நிலையக் கலையரங்கில் 26-1-80 இரவு 7 மணிக்கு அட்வகேட் ஆர். சந்திரன் பிள்ளை அவர்களின் தலைமையில் பொதுக்கூட்டம் துவங்கியது. ஸ்ரீகிருஷ்ண கான வித்யாலய மாணவியரின் 'ஸ்ரீராமகிருஷ்ண கர்ணாமிர்தம்' இறைவணக்கப் பாடல்களைத் தொடர்ந்து சுவாமி கருணானந்தர் 'இந்தியாவிற்கு விவேகானந்தரின் செய்தி' என்ற தலைப்பிலும், சுவாமி கமலாத்மானந்தர் 'இந்துமதமும் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரும்' என்ற தலைப்பிலும் உரை நிகழ்த்தினர். அட்வகேட் வி. எஸ். கந்தசாமி அவர்களின் நன்றியுரையுடன் இரவு 9-45-க்கு விழா நிகழ்ச்சிகள் நிறைவு பெற்றன.

● விருதுநகரில், சமரச சன்மார்க்க சங்கத்தின் சார்பாக 27-1-80 ஞாயிறன்று பராசக்தி வெயிலுகந்தம்மன் கோவிலில், சுவாமி கமலாத்மானந்தர் ஒரு நாள் அந்தர்யோகம் நடத்தினார்.

● சிவகாசியில் சுவாமி விவேகானந்தரின் பெயரால் 'ஸ்ரீசுவாமிஜி சன்மார்க்கப் பேரவை' இயங்கி வருகிறது. இந்தப் பேரவையின் சார்பாகச் சிவகாசியிலுள்ள சிவன் கோவிலில் ஜனவரி 23, 24, 25 ஆகிய மூன்று நாட்களும் இரவு 7-45 முதல் 9-15 வரை ஸ்ரீமத் சுவாமி கமலானந்தரின் ஆன்மிக உபந்நியாசங்கள் நடைபெற்றன. இவை பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் ஜயந்தியை முன்னிட்டு நடைபெற்றன.

# எரியில் ஆடும் இடம்

வாகீசகலாநிதி **கி. வா. ஜகந்நாதன்**

இறைவன் தேசுமிக்க திருவுருவத்தை யுடையவன். அக்கினி மலையாக நின்றவன். மிக்க வெப்பமுடைய பொருளின் முன் சிறிது வெப்பமுடைய பொருள் தண்ணியதாகத் தோன்றும். பேரொளியின் முன் விளக்கின் சிறு சுடரொளி மங்கித் தோற்றம் அளிப்பது போல அமையும். துன்பங்களிலும் அப்படி ஒரு நிலை உண்டு. பெரிய துயரம் வந்துவிட்டால் சிறிய துயரங்களின் கடுமை தோன்ருது. 'வாளேறுபடத் தேளேறு மாய்ந்தாற் போல' என்ற பழமொழி ஒன்று உண்டு. தேள் கொட்டிய கை வெட்டுப்பட்டால் தேளின் விடம் தெரியாது.

இறைவன் ஆடும் நடனங்களில் ஒன்று அக்கினி நடனம். அவன் தீயில் நின்று நடனமாடுவான். அவனுக்கு அது குளிர்ந்த நீராக இருக்கும். அவனை அனலன் என்று தக்கயாகப்பரணியில் ஒட்டக் கூத்தர் கூறுவார். எரிபாய்ந்து ஆடும் எம்பெருமானைக் காரைக்கால் அம்மையார் நினைக்கிருர்.

"எம்பெருமானே, நீ நள்ளிரவில் தீயில் ஆடுகிருயே; அது எந்த இடம்? அதை எனக்குக் காட்டுவாயா?" என்று கேட்கிருர். குழந்தை ஆவலுடன் தன் தந்தையைக் கேட்பது போலக் கேட்கிருர். 'எந்தாய்!' என்றே விளித்து அந்தக் கேள்வியை விடுக்கிருர்.

'என் தந்தையே' எனக்கு ஒரு பெரிய ஆசை இருக்கிறது' என்று தொடங்குகிருர். அன்பர்கள் ஆசையை அறுத்தவர்கள். உலகியற் பொருளை நுகர வேண்டுமென்றும், அவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றும் அவர்களுக்கு ஆசை எழாது. இறைவனைப்பற்றி நன்ருகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றும், அவனுடைய திருவருளைப் பெற வேண்டும் என்றும் அவர்கள் ஆசைப் படுவார்கள். அது ஆசையன்று; பக்தி நிலைகளில் ஒன்று. 'எம்பெருமானே, எனக்கு ஒரு பேராசை இருக்கிறது. அது என்றும் நீங்காமல் என்னிடம் இருக்கிறது' என்று தொடங்குகிருர் அம்மையார்.

**எமக்கு இதுவோ பேராசை; என்றும் தவிராது.**

என்ன ஆசை அது? "ஒரு நாள் அந்தத் திரு நடனக் கோலத்தைக் காண வேண்டும் என்ற ஆசை ஒரு காலைக்கு ஒரு கால் மீதூர்ந்து வருகிறது. 'நீ குழந்தை; உன்னால் அதைக் காண முடியாது' என்று சொல்லாதே. ஒரு நாள் நீ என் ஆசையை நிறைவேற்றத்தான் வேண்டும். இந்த ஆசையைத் தீர்ப்பார் உலகில் வேறு எவரும் இல்லை. என் விருப்பத்தையெல்லாம் நீதானே நிறைவேற்றி வைக்கிருய்? ஆதலால் உன்னிடத்திலே விண்ணப்பித்துக் கொள்கிறேன். அந்தத் திருக்கோலத்தை நீ எனக்கு ஒரு நாள் காட்டுவாயா?"

**எமக்கு ஒரு நாள் காட்டுதியோ, எந்தாய்!**

"உன்னுடைய திருமேனியே தீயைப் போல விளங்குகிறது. உன்னுடைய திரு முடியிலுள்ள சடாபாரம் அந்தத் தீயின் கொழுந்து போலச் செக்கச் செவேலென்று காட்சி அளிக்கிறது. தீயின் ஒளியை அடக்குவதற்காக நீ அதில் பாய்ந்து ஆடுகிருயோ? அந்தச் சடாபாரத்தின் ஒளி அக்கினியின் ஒளியையும் அடக்கி விடுகிறது. நெருப்புப் பரவிஞற் போலப் புரிபுரியாகத் தோன்றுகிறது அந்தச் சடை."

**அமைக்கவே**
**போந்து எரிபாய்ந் தன்ன புரிசடையாய்!**

"இருள் பொங்கித் ததும்பி உலகெங்கும் மூடிக் கொள்வது போல நள்ளிரவு தோன்றுகிறது. அந்தப் பொங்கு இரவில் நீ ஆடுகிருய். இருள் அடர்ந்து செறிந்திருக்கும்போது, நீ ஆடும் கனலும் உன் திருமேனியும் சடையும் நடனமும் தெளிவாகத் தெரியும். அந்தக் காட்சியை நான் காண விரும்புகிறேன். எந்த இடத்தில் நீ அப்படி நடனம் ஆடுகிருய்? அந்த இடத்தைக் காட்டுவாயா?" என்கிருர்.

**பொங்கு இரவில்**
**போந்து எரி ஆடும் இடம்,**

"இருள் பொங்கித் ததும்பி நின்ருலும் உன் அருள் பொங்கும் நடனத்தைக் காண அதுவே ஏற்ற நிலைக்களமாக இருக்கிறது. இருள் செறிந்த இரவில் மின்னல் கீற்றுத் தோன்றினுல் பளிச்சென்று காட்சி தருவது போல அந்த நடனக் காட்சி விளக்கமாகத் தெரியும். ஆதலால் அந்த நடனம் நிகழும் இடத்தைக் காட்டுவாயா?"

**பொங்கு இரவில்**
**போந்து எரிபாய்ந் தாடும் இடம்**
**. . . எமக்கு ஒருகால் காட்டுதியோ?**

உலகம் எங்கும் அவித்தை என்னும் அஞ்ஞானம் கப்பி மூடியிருக்கிறது. 'இருள் தருமா ஞாலம்' என்று இதனைக் கூறுவார்கள். எந்தச் சுடரும் தோன்ரு விட்டால் உலகம் இருளில் மூழ்கிக் கிடக்கும். அதற்கு அதுதான் இயல்பு. புறவிருள் மாத்திரம் அன்று. உலக இன்பத்தில் ஆழ்ந்து உண்மை யென்னும் ஒளியைக் காணுமல் தடுமாறுகிறவர்கள், இருட்டில், வழி தெரியாமல் தடுமாறும் குருட்டுப் பசுக்களைப் போல இருப்பார்கள். உலகத்தைப் பார்க்கும்போது எங்கும் இருள், எல்லாம் இருளாக இருக்கும். இருள் நிரம்பிய இடத்தில் பொருள் களின் உண்மை வடிவம் தெரியாது. அவித்தை யிருளில் மூழ்கிக் கிடக்கும் மக்களுக்கு மெய்ப் பொருள் இன்னதென்று தெரிவதில்லை. ஏதேனும் ஒளி கிடைத்தால் அதனுல் ஒருவாறு உண்மை புல னுகும். அந்த ஒளியினுல் பொருள்களின் உண்மை இயல்பு தெரியும்.

இறைவன் நள்ளிருளில் நட்டம் பயின்றுடும் நாதன். இருளில் மூழ்கிக் கிடப்பவர்கள் அவன் ஆடும் எரியின் ஒளியிலே உண்மையை உணரத் தலைப்படுவார்கள். பிறகு அந்த ஒளி எங்கிருந்து வரு கிறது என்று ஆராயப் புகுந்தால் இறைவன் ஆடும் இடம் தெரியும். நெருப்பினிடையே அவன் ஆடும் நடனக் கோலத்தைக் காணலாம். அந்த இடம் தெரியாமல் இருட் பரப்பில் துழாவிக்கொண்டிருந் தால் நாம் கண் படைத்திருந்தாலும் பயன் இல்லை. இருட்டறையில் கண்ணுடையவனும் குருடனும் ஒரே நிலையில்தான் கையால் துழாவிக்கொண்டிருப் பார்கள். ஒளி வந்தால் கண் உடையவன் தன் முன் உள்ள பொருள்களைக் காணுவான்; கண் படைத்த பயன் பெறுவான். கண் இருந்தும் இருள் பரவிய இடத்தையே நம் இடமாக எண்ணி அதில் உழன்ருல் நம் வாழ்நாள் வீணுகிவிடும். இறைவன் அளித்த கண்ணினுல் பெறும் பயனைப் பெற மாட் டோம். ஆகவே ஒளி பரவும் இடத்தை நோக்கி சென்று காண வேண்டும். உடம்பினுல் செய்யும் பயணம் அன்று அது. மனத்தினுல் செய்யும் யாத் திரை இது. "ஒளி எங்கே! அதைத் தரும் நெருப்பு எங்கே? அந்த நெருப்பில் ஆடும் இறை வன் எங்கே!" என்ற ஏக்கம் முறுக முறுக நம்மை ஆண்டவன் அந்த இடத்துக்கு அழைத்துச் செல் வான்.

ஆகையால், "அப்பனே, நீ எரியில் பாய்ந்து ஆடும் இடம் எது? அதனைக் காட்டு. நான் அங்கே சென்று அந்த எரியைக் காண்பேன். அந்த எரியின் ஒளியால் பொருள்களின் உண்மை உரு வைக் காண்பேன். அதை காட்டுவாயா?" என்று கேட்கிருர் அம்மையார்.

**காட்டுதியோ எந்தாய்?**
**ஏந்து எரிபாய்ந்து ஆடும் இடம்.**



இருட்டில் இருப்பவன் கண்ணை மூடிக்கொண்டு துழாவுகிருன். அவன் கண்ணைத் திறந்தாலும் அந்த இருளே தெரியும். இருட்டில் உழலும் குருட னுக்குக் கண்ணே கிடைத்தாலும், அவன் அப் பொழுதும் குருடனுகவே இருப்பான். ஒளி இருந் தாலன்றி கண் எதையும் காண இயலாது. நாம் கண் படைத்திருக்கிருேம். ஆனுல் பொருளைக் காணுவதற்கு ஒளி கிடைக்கவில்லை. 'அந்த ஒளி கிடைக்கும் இடத்தை எனக்குக் காட்ட வேண்டும்' என்பவரைப் போல இறைவனிடம் விண்ணப்பித்துக் கொள்கிருர் காரைக்கால் அம்மையார்.

**எமக்கு இதுவே பேராசை; என்றும் தவிராது;**
**எமக்கு ஒருநாள் காட்டுதியோ எந்தாய்?**
**—அமைக்கவே**
**போந்து எரி பாய்ந்தன்ன புரிசடையாய்,**
**பொங்குஇரவில்**
**ஏந்துஎரிபாய்ந்து ஆடும் இடம்.**

[எம் தந்தையே, மற்ற ஒளிகளை அடக்கும் பொருட்டு நெருப்பானது வந்து பரந்தது போலத் தோன்றும் புரிசடையுடைய சடாபாரத்தை உடை யவனே, எமக்கு இது ஒரு பேராசை; அது எப் போதும் நீங்காமல் இருக்கிறது. இருள் விம்மித் ததும்பும் இரவிலே கொழுந்துகளைத் தாங்கும் நெருப்பிலே திருநடனம் ஆடும் இடத்தை எமக்கு ஒரு நாள் காட்டுவாயோ?]

எமக்கு என்ற பன்மை இறைவனேடு உறவு கொண்டு நெருங்கிய நெருக்கத்தால் வந்த பெருமி தத்தைக் காட்டுகிறது. இதுவோ: ஓ-அசைநிலை.

இது பேராசை, இது என்றும் தவிராது என்று இது என்னும் எழுவாயைப் பின்னும் கூட்டுக; முதல் நிலைத்திவசம். அமைக்க-மற்ற ஒளியை அடக்க. பாய்ந்தாலன்ன என்பது பாய்ந்தன்ன என்று விகார மாயிற்று. புரிசடையாய்-தனித்தனியே பிரிந்து விளங்கும் சடையை உடையவனே. பொங்கு-இருள் பொங்கும், ஏந்துஎரி-கொழுந்துகளை ஏந்தும் எரி; நீ கையில் ஏந்துகின்ற நெருப்பு எனலும் ஆம். 'நெருப்பைக் கையிலே ஏந்திய நீ அதைக் காலின் கீழும் கிடத்தி அதன் வெம்மை அடராமல் குளிர்ந்தி ருக்க, அதன் மேல் ஆடுகின்றாய்' என்ற நயமும் தொனித்தது.

இடம் காட்டுதியோ என்று முடியும்.

இறைவன் ஞான ஒளி படரும் இடத்தில் மாசு போக்கிக் கொழுந்து விடும் ஞானக்கினியிடையே ஆனந்த நடனம் ஆடுகிறான். எந்த உள்ளம் மாசு மறுவற்று ஞானக் கனல் கொழுந்துவிடும் இடமாக இருக்கிறதோ அங்கே அவன் தன் அருளைச் செலுத்தி ஆனந்த நடனம் ஆடுவான். இந்தக் கருத் துக்களெல்லாம் குறிப்பாகப் புலப்படும்படி இந்தப் பாடல் அமைந்திருக்கிறது.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 70-ஆவது பாடல். ○

ஸ்ரீராமபிரானின் அருளுரைகள்:

# வாழ்க்கையும் அதன் முடிவும்

ஓர் இலையின் நுனியில் ஒட்டிக் கொண்டிருக்கும் நீர்த்துளி எப்போது வேண்டுமானாலும் உதிர்ந்து கீழே விழுந்துவிடும். அது போலவேதான், மனித னுடைய உயிர் திடீரென்று எந்த வினாடியில் வேண்டுமானாலும் இந்த மட்டரகமான உடலைவிட்டு உதிர்ந்து போகிறது.

* * *

விவேகத்தின் ஆற்றலை வளர்த்துக்கொள்ளாதவர் களுக்கும், இந்திரிய விஷயங்களாகிய பாம்பு தீண்டி யதால் இதயம் வெந்து போயிருப்பவர்களுக்கும் வாழ்க்கை என்பது துன்பத்திற்கு மூலகாரண மாகவே அமைகிறது.

ஆனால், மெய்ஞ்ஞானம் பெற்றுச் சாந்தி அடைந்தவர்களுக்கோ வாழ்க்கை என்பது பேரின்ப மாகவே அமைகிறது.

* * *

மண்ணுலக வாழ்க்கை ஆகாயத்தில் இலேசாகத் தோன்றும் மேகம் போல நிலையற்றது; எண்ணெய் தீர்ந்துபோன விளக்கின் திரியைப் போன்றது; நீர் மட்டத்தில் தவழும் சிற்றலை போன்றது. ஒரு கணம் தோன்றி மறுகணம் மறைவது.

* * *

வாழ்க்கை, உள்ளே சாரமில்லாமல் வெறுமனே காலியாக இருக்கும் ஓட்டைப் பொருள். என்றாலும் மூடர்கள் நீண்ட காலம் வாழ ஆசைப்படுகிறார்கள். ஆனால் அத்தகைய வாழ்க்கையின் மூலம் துன்பம் தான் வருகிறது.

* * *

சுண்டெலி நாள்தோறும் சிறுகச் சிறுகப் பூமி யைத் தோண்டி வளையை ஆழப்படுத்துகிறது. அது போலவே காலம் என்ற சுண்டெலி ஒவ்வொரு நிமிடமும் ஜீவர்களுடைய வாழ்க்கையைக் குடைந் தெடுத்தபடியே இருக்கிறது.

* * *

எலியைக் கூர்ந்து கவனித்திருந்து பூனை அதை விழுங்கிவிடுகிறது. அதுபோலவே ஒவ்வொரு வருடைய வாழ்வையும் அந்திமகாலம் என்ற பூனை கூர்ந்து கவனித்தபடியே இருக்கிறது.

* * *

பச்சை மண்ணாலான ஒரு மட்பாண்டத்தில் வைக்கப்பட்ட தண்ணீர் போல, மனிதனுடைய வாழ்க்கை கணந்தோறும் கசிந்தபடி க்ஷீணித்து வருகிறது.

* * *

நோய்கள் பகைவர்களைப் போன்று மனித உடலைப் பற்றிக்கொண்டு அதை அழித்து வருகின்றன. மூப்பு என்ற புலி, மனித உடலின்மீது பாய்ந்து அதைத் தாக்கி வீழ்த்துகிறது. "எப்போது இதற்குள்ளே புகுந்து இதை உடைமையாக்கிக் கொள்ளலாம்" என்று மரணம் உடலைக் கவனித்துக் கொண்டே இருக்கிறது.

(101-ஆம் பக்கம் பார்க்க)

# கருணை கரைந்த அருணைகிரி

ரா. கணபதி

"ஒரு சமயம் பரமசிவன் கைலாஸத்தில் ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்திருந்தார். அப்போது பார்வதி பின் பக்கமாக வந்து வேடிக்கையாக அவர் கண்ணைப் பொத்தினாள். (ஈச்வரனுடைய இரண்டு கண்களும் சந்திர ஸூர்யாத்மகமானதால் அம்பிகை அவர் கண்ணைப் பொத்தியவுடன்) ஸூர்யனும் சந்திரனும் தங்கள் பிரகாசத்தை இழந்து விட்டன. லோகத்திலுள்ளவர்களெல்லாம் நிலைகலங்கி விட்டனர். விபரீதத்திலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று பக்தர்கள் பரமேச்வரனிடம் பிரார்த்தித்தார்கள். பரமேச்வரனின் சக்திக்கு குறைவேயில்லையாதலால் அவர் உடனே தம்முடைய நெற்றிக் கண்ணைத் திறந்தார். (அதனுடைய பிரகாசத்தால்) ஜீவர்களைக் காப்பாற்றினார்.

"பார்வதிக்கு பயம் உண்டாயிற்று. ஈச்வரனின் கண்ணைப் பொத்திய தன் கைகளை அவசரமாக எடுத்துவிட்டு நின்றாள்."

"முதலில் பரமேச்வரன் ஒன்றுமே சொல்லவில்லை' தேவியானால் கிலியில் நடுங்கியபடி நின்றாள். அப்புறம் ஈச்வரன் மிருதுவாக, 'தேவி நீ பண்ணியது உனக்குப் பொழுதுபோக்கு விளையாட்டுத்தான். ஆனால் இதனால் உலகம் முழுவதற்கும் வெளிச்சமில்லாமல் ஆகிவிட்டது. ஜனங்கள் எத்தனை அவஸ்தைக்கு ஆளானார்கள், பார்! க்ஷணகாலம் தானே (கண்ணைப் பொத்தினோம்) என்று நீ நினைக்கலாம். ஆனால் நமக்கு ஒரு க்ஷணமென்பது பூலோகத்திற்கு ஒரு யுகம் ஆயிற்றே! ஏன் இப்படிக் குழந்தைத்தனம் செய்தாய்?

பரமேச்வரன் இப்படி நயமாகக் கடிந்து கொண்டதும் பார்வதி தவற்றை உணர்ந்து ரொம்பவும் வெட்கப்பட்டாள். தான் பண்ணின பாபம் தீருவதற்காக......"

பிரஹ்மஸ்ரீ ஜகதீச்வர சாஸ்திரிகளுக்குக் கதை சொல்லி வந்த பிரஹ்மஞானி ரமணரின் குரல் கம்மியது எளிய வார்த்தைகளில் கதை சொல்லும் போதே, அந்தந்தப் பாத்திரமாகி அத்புத நாடகச் சுவை பெருக்கிய பகவான், இங்கே தேவியாகிப் பாவ உணர்வில் பச்சாதாபப்பட்டதோடு நில்லாமல் அவளுடைய அருமைக் குழந்தையாகி 'அம்மா இப்படி நினைக்க நேர்ந்ததே!' என்று மனநோவு கொண்டதில்தான் அவரது தொண்டை அடைத்தது. சுதாரித்துக் கொண்டு தொடர்ந்தார்.

"என் பாபத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக நான் தபஸ் பண்ண அனுமதியுங்கள்" என்று பரமசிவனை வேண்டினாள்.

'ஜகன்மாதா நீ! உனக்கேது பாபம்? நீ பிராயச்சித்த தபஸ் பண்ண வேண்டியதேயில்லை' என்றார் ஈச்வரன். (பகவான் நெஞ்சு தழதழக்கத்தான் இதைச் சொன்னார்.)

"தேவியை அது திருப்திப்படுத்தவில்லை. 'உலகத்துக்கு உதாரணமாக நான்தான் வாழ்ந்து காட்ட வேண்டும். அதனால் பிராயச்சித்தமாகத் தபஸ் பண்ணத்தான் வேண்டும்' என்றாள்.

"ஈச்வரனும் அனுமதி கொடுத்தார்.

"தேவி தெற்கு நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

"அப்போது காசி ராஜ்யத்தில் மழையே பெய்யாததால் பஞ்சம் ஏற்பட்டிருந்தது. ஜனங்கள் ரொம்பவும் கஷ்டப்பட்டார்கள். இதை பார்த்ததும் தேவிக்குக் கருணை பொங்கிற்று. தன் ஸங்கல்பத்தாலேயே ஒரு பெரிய மாளிகையை (அன்ன சத்திரமாக) ஸ்ருஷ்டி செய்தாள். எடுக்க எடுக்கக் குறையாத ஒரு அன்னப் பாத்திரத்தைக் கையில் வைத்துக் கொண்டு, அன்னபூர்ணி என்ற பெயரில் அந்தச் சத்திரத்தில் அமர்ந்து ஜனங்களுக்கெல்லாம் ஆகாரம் வழங்கலானாள்.

"ராஜ்யம் முழுவதிலும் அவளுடைய புகழ் பரவியது.

"இதற்குள் காசி ராஜாவின் தானிய பண்டாரம் முழுதும் காலியாகி விட்டது. மேற்கொண்டு என்ன செய்வது என்பது புரியாமல் அவன் குழம்பினான். அப்போது அன்னபூர்ணி செய்கிற அன்ன தானத்தைப் பற்றிக் கேள்விப்பட்டான். ராஜாவான தன்னுடைய தானிய இருப்பே தீர்ந்து போன பின்னும் ஒரு சாதாரணம் பெண் நிறுத்தாமல் அன்னதானம் செய்வதாவது என்று அவளுடைய சக்தியில் ஆச்சர்யம் அடைந்தான். இது நிஜமாக இருக்குமா என்று அவளைப் பரிக்ஷை பார்க்க நினைத்தான். அவளிடமிருந்து இரவலாக நாலைந்து படி தானியம் வாங்கிக் கொண்டுவர ஆள் அனுப்பினான்.

''அதெல்லாம் இரவல், கிரவல் கொடுக்கிற பேச்சுக்கு இடமில்லை. அவரே இங்கே வந்து சாப்பிட்டு விட்டு போகட்டும்' என்று தேவி பதில் கொடுத்தாள்.

''எப்படியும் அவள் ஸாமர்த்தியத்தைச் சோதனை பண்ணிவிட வேண்டுமென்று ராஜா தன் மந்திரிமார்களையும் அழைத்துக் கொண்டு சத்திரத்திற்குப் போனான்; எல்லோரும் மாறு வேஷத்தில் போனார்கள். அவர்கள் எவ்வளவு சாப்பிட்ட போதிலும் அன்னவகைகள் தீராமல் அக்ஷயமாக வளர்ந்து கொண்டே போயிற்று. இதைப் பிரத்யக்ஷமாகப் பார்த்ததும் ராஜா இது மனுஷ்ய ரீதியில் நடக்கும் காரியமல்ல என்றும், ஏதோ திவ்ய சக்தியாலேயே இப்படி நடக்கிறது என்றும் உணர்ந்தான்.

''ஆனபடியால் சாப்பிட்டு முடித்ததும் நேரே போய் அன்னபூர்ணியின் பாதத்திலே விழுந்தான். (பாஷ்பகத்கதமான குரலில் பகவான் ரமணர் தொடர்கிறார் :) 'மஹா மாதாவே! இங்கேயே எங்களோடுகூட நீ எந்நாளும் இரு அம்மா! அன்ன பிக்ஷை போட்ட நீயே எங்களுக்கு மோக்ஷ பிக்ஷையும் போட வேண்டும்' என்று அம்பிகையைப் பிரார்த்தித்தான்.

அவனுடைய பக்தியிலே மனம் குளிர்ந்த ஜகன் மாதா தனது மூலமான திவ்ய ரூபத்தை எடுத்துக் கொண்டு அவனுக்கு தரிசனம் தந்தாள். 'என் பிள்ளையே! உன் பக்தியிலே ப்ரீதியானேனப்பா. நான் இவ்வளவு காலம் இங்கே தங்கியதாலேயே இனி உன் ராஜ்யத்தில் வறட்சி ஏற்படாமல் வளமாக இருக்கும். இப்போதிலிருந்து மழை ஆரம்பித்து விடும். நான் என் வாஸத்தை மேலும் இங்கே நீடிப்பதற்கில்லை. தபஸ் செய்வதற்காக தக்ஷிணத்துக்கு நான் போயாக வேண்டும். ஸந்தோஷமாக இருந்து கொண்டு ஜனங்களை அன்போடு பரிபாலித்து வா அப்பா' என்றாள்.

''சரி அம்மா! உன் இஷ்டப்படியே நீ போனாலும் இங்கேயும் எங்களுடைய பூஜா மூர்த்தியாக நீ கோவில் கொண்டு எங்களுக்கு எப்போதும் கிட்டுபவளாக இருக்க வேண்டும்' என்று ராஜா விஞ்ஞாபித்துக் கொண்டான்.

''அம்பிகையும் அப்படியே செய்தாள். (காசியில் அன்னபூர்ணேச்வரி விக்ரஹமாகக் குடிகொண்டாள்.) அப்புறம் தெற்கு நோக்கி புறப்பட்டு விட்டாள்.

''இதுதான் காசி அன்னபூர்ணேச்வரி தோன்றியதற்கும் அவள் மகிமைக்கும் மூலமான கதை.*

''காசியிலிருந்து கிளம்பிய தேவி காஞ்சீபுரத்திற்கு வந்தாள். மண்ணையே லிங்கமாகப் பிடித்து வைத்து அந்தப் பிருத்வி லிங்கத்தைப் பூஜை பண்ணிக்கொண்டு வந்தாள்.

''தன் பாவம் தீர்ந்துவிட்டது என்ற உணர்வு அவளுக்கு உண்டாயிற்று. அதன் மேலும், காஞ்சீபுர ஜனங்கள் வேண்டிக்கொண்டதன் மேலும் அங்கே காமாக்ஷியாக ஆவிர்பாவம் கொண்டாள்.

''அதற்கப்புறம், 'அருணகிரி (திருவண்ணாமலை)க்குப் போகிறேன்' என்று சொல்லிக்கொண்டு அவள் ரிஷபத்தின் மேலே ஆரோஹணித்து இங்கே வந்தாள்.

(இதிலிருந்து பக்தி பரவசத்தில் பகவான் வாக்கு அடிக்கடி தடைப்பட்டது; ஞானத்தில் மின்னும் திருநயனங்களில் பிரேமை நீர்த் திரையிட்டதின் ஜ்வலிப்பு மேலும் கூடியது.)

''அருணாசலத்திற்கு வந்ததும் தேவி முதலில் பவழக்குன்று—'ப்ரவாள கிரி' என்று ஸம்ஸ்கிருதத்தில் சொல்வது—அடிவாரத்திலிருந்த கௌதமர் ஆச்ரமத்திற்குப் போனாள். கௌதமரின் பிள்ளை சதானந்தர்தான் அவளைப் பார்த்தார். பார்த்ததுமே திவ்ய பரவசம் அடைந்தார். தேவியை உபசாரம் பண்ணி வரவேற்று, விதிவத்தாகப் பூஜை செய்தார். 'இன்னும் கொஞ்ச நேரம் இங்கேயே எழுந்தருளியிரம்மா. என் தகப்பனார் தர்பை சேகரித்து வரப் போயிருக்கிறார். அவரை அழைத்துக் கொண்டு வருகிறேன்' என்று சொல்லிவிட்டு வெளியே போனார்.

அப்போது கௌதமரும் வேலை முடித்து ஆச்ரமத்திற்குத் திரும்புகிற சமயமாக இருந்தது. சதானந்தர் அவரிடம் ஓட்டமாக ஓடிப்போய், ஒரே பரபரப்போடு (பரப்பிரம்ம சாந்தரான ரமணரே

*காசிராஜன் வேண்டியபடி (பிற்பாடு சங்கரரும் இவளிடமே அன்ன பிக்ஷை மட்டுமின்றி ஞானவைராக்யமும் வேண்டியபடி) அவனுக்கு தேவி முக்தி நல்கியதையும் புராணம் கூறுகிறது. புராண விவரம் எதுவும் விடாது கூறிய ஜீவன் முக்தர் இந்த முக்திப் பிரஸாதத்தை சொன்னதாக மாது ஸ்ரீ நாகம்மாளின் குறிப்பிலே காணாதது ஆச்சரியமாயுள்ளது. தவறுதலாக விடப்பட்டதோ அல்லது மிகும்பிகையால் ஞானானுபூதி பெற்ற பகவான், தேவி, தரும் முக்தி வரத்தை வாய்விட்டு சொல்லவே ஆகாத நிலையில், தாமே தான் மௌனமாயிருந்துவிட்டாரோ?

இங்கே ஓட்டமாக ஓடிப் பரபரத்தார்—கதாபாத்திரத்துடன் அத்வைத இழைவிலே!), 'அப்பா! அப்பா! அம்பாளே நம் ஆச்ரமத்துக்கு வந்திருக்கிறாள்' என்றார்.

(அதே சமயத்தில் அருணாசலத்தைச் சூழ்ந்திருக்கும் அரண்யம் முழுதும்—கண்ணைக் கொட்டுகிற நேரத்துக்குள்—பச்சைப் பசேல் என்றாகி விட்டது எங்கே பார்த்தாலும் ஒரே புஷ்பக் கொத்துக்களும், பழக்குலைகளுமாகி விட்டது.)

(அக்னிமலை என்பதை ஓரளவு இன்னும் மெய்ப்பிக்கும் அருணாசலப் பொட்டலிலே பச்சை மீனாக்ஷியின் பச்சைக் குழந்தையான நம் பகவான் குடிகொண்ட ஸ்கந்தாச்ரமம் இப்படியேதான் மரகதத் திட்டாக இருக்கிறது!)

''கௌதமர் ஆச்சரியமடைந்து பிள்ளையிடம், 'அப்படியா? அப்படியா? அம்பிகையா வந்திருக்கிறாள்?' என்றார். 'ஆமாம், ஸாக்ஷாத் பார்வதி தேவியே வந்திருக்கிறாளப்பா!' என்று நாத்தழுதழுக்கச் சொன்னார் சதாநந்தர். (ஸதாநந்தரான ரமணரும்தான்!) கௌதமர் புளகாங்கிதத்தோடு ஆச்ரமத்துக்கு வேக வேகமாக வந்தார். பார்வதியை தரிசனம் செய்தார்; பூஜை செய்தார்.

''தேவியோ அவரிடமே எப்படியெப்படித் தபஸ் பண்ணவேண்டும் என்று பாடம் கேட்டுக்கொண்டாள்! அவர் சொன்னபடியே ஈச்வரனையே ஸ்மரித்தபடி தபஸ் பண்ணினாள். (ஈச்வரனையே ஸ்மரித்தபடி தேவி தபஸ் பண்ணுவது நமக்குச் சில வார்த்தைகள்தாம். ஆனால் ஸாக்ஷாத் பரம ஸத்யத்தை அதன் பரம சைதன்ய விலாஸனம் உன்னி உணர்ந்ததை ஸாக்ஷாத்தாக அநுபவித்த நம் பகவானாலோ இங்கே தம்மைக் கட்டுப்படுத்திக்கொள்ளவே முடியவில்லை. அம்பிகை தபஸ் செய்கிறாள்; ஈச்வரனைக் குறித்து! ஆஹா, அதை ரமணராக்கும் சொல்கிறார்! அல்லது சொல்லமுடியாமல், செய்தே காட்டிவிடுகிறார்!)

''பஹுகாலம் அம்பிகை தபஸ் செய்தபிறகு மஹாதேவன் பிரஸன்னமானான். 'நீ என்ன வரம் கேட்டாலும் தருகிறேன்' என்றான். (வாசகர்களே! தேவியிடம் தேவன் பிரேமைச் செறிவோடு சொன்ன வாசகத்தை அகச் செவியில் அண்ணாமலை முனிவன் குரல் கேட்கப் பிரார்த்தியுங்கள்.)

''தேவி மஹா அடக்க ஒடுக்கத்தோடு, 'உங்களை விட்டு வேறாக என்றால் இனி ஒரு க்ஷணமும் இருக்க முடியாது. எனக்கென்று வேறாக ஒரு உடம்பு இருந்தால், இப்போது செய்த மாதிரியே இனியும் நான் தப்பிதம் செய்து, தண்டனையாக உங்களைப் பிரிந்து சென்று விரஹதாபமும் தபஸின் தாபமும் அடையுமாறு நேரலாம். அதனால் என்னை உங்களிடமிருந்து பிரிக்கவே முடியாதபடி (அத்வைத ரமணர் பக்திச் சுவைக்காகக் கொஞ்சம் த்வைதமாகப் பிரிந்து சோகத்தின் திவ்யானந்தச் சுமை குரலை அடைக்கப் பேசுகிறார்) ... ... அதனால் என்னை உங்களிடமிருந்து பிரிக்கவே முடியாதபடி உங்கள் சரீரத்திரத்திலேயே பாதியாக என்னை வைத்துக்கொண்டு விடுங்கள்' என்று வேண்டினாள்.

''பரமேச்வரன் அம்பாள் இஷ்டப்படியே அனுக்ரஹம் செய்தார். அவளுக்குத் தம் சரீரத்திலேயே பாதியைக் கொடுத்து அர்த்தநாரீச்வரரானார்... ...''

மஹர்ஷியின் வாக்கு நின்றது. நடுவில் பலமுறை ஏற்பட்டாற்போல் உணர்ச்சிப் பெருக்கில் ஏற்பட்ட தொண்டை அடைப்பு அல்ல இது. ஏகரஸ உணர்வான பரமசிவ சாந்தத்தில் அவர் தோய, அதில் உண்டான கம்பீர, கௌரவ மௌனமே அது!

இது 1948 ஜூலை 30-ஆம் நாள் ஐயன் அருளியது. வேறு அநேக ஸந்தர்ப்பங்களில் அருணாசலமானது அர்த்தநாரீச்வர ஸ்வரூபமே என்று பகர்ந்திருக்கிறார். சென்ற இதழில் சொன்னாற்போல் அம்மா அப்படியே அண்ணாமலையப்பன் தன்னை விழுங்கிவிட விட்டாள் என்பது இதுதான்.

ஒரு விதத்தில் பார்த்தால் அவள்தான் அவனை விழுங்கினாள் என்றும் சொல்லலாம். ஞானமே உருவான வெற்றுவெளி ஆகாய சிவனாக, அசலமாக உள்ள மலை இப்பேர்ப்பட்ட கருணையைக் கொட்டுகிறதே, அந்த த்வைத லீலை அவள் ஸமாசாரம்தானே? அசலமாத அம்மலை இருந்தாலும், அன்பர்களையோ தாயைக் குழந்தை சுற்றிச் சுற்றி வருமாப்போலே, அதனைச் சுற்றி சுற்றி (உலகே 'கிரி ப்ரதக்ஷிணம்' என்று போற்றும்படியாக) வலம் வரச் செய்வது அவளது காரியம்தானே? இந்த கிரி ப்ரதக்ஷிணத்தைத்தான் நம் பகவானும் ''ஸஞ்சார ஸமாதி'' என்றே பாராட்டியிருக்கிறார்! சிதம்பரத்தில் அசலனாக இல்லாமல் ஐயனை அவள் ஆட்டுவிக்கிறாள் என்று நம் மஹர்ஷி வெண்பா பாடினால், இங்கேயும் அசலம் அகிலரனைவரையும் சுற்றிச் சுழற்றுவது அதே லீலையின், பிரேமையின் த்வைதானந்தம்தான் என்று நாம் செம்பா பாடலாம்.

அதென்ன செம்பா என்கிறீர்களா? இந்த மலைக்குப் பேரே அருண கிரிதானே? அதனால் இங்கேயே ஞானம் எய்திய அருணகிரிநாதர் 'செஞ்

சொல்' என்றபடி இம்மலையைப் போற்றுவது செம்பாதான். ரமணபகவான் சொன்ன அசல நிர்குண பிரம்மமே இம்மலையாயின் இது ஸ்படிக கிரியாகத்தான்—எந்நிறமுமின்றி, எவ்வெண்ணத்தையும் தன்னில் ஏற்றுக்காட்டியும் தான் மாருதே இருப்பதான ஸ்படிகமாகத்தான்—இருக்கவேண்டும். எப்போது அருணமலையாயிற்ரோ அப்போதே அருளையாம் கருணையன்னை கலந்தமலைதான் இது.

இது நம் பகவானுக்கா தெரியாது? அத்வைத நிலையிலே இதனை மஹாமாயா கலக்காத ஸ்வச்ச பிரம்மன்—சிதம்பரத்திலும் ஒரு படி கூடுதலானது—என்றவரே, த்வைத பிரேமச்சுவைப்பில் இதில் அம்பிகையும் அடக்கமாயிருப்பதை நிறையச் சொல்லியிருக்கிருர். ஒரு போதில் இது முற்றிலும் சக்திமலையே என்னுமாறு, "அருணுசலம் ஸ்ரீ சக்ராகாரமானதே என்று ஒரு நம்பிக்கை இருக்கிறது. அதில் கரடும் முரடுமாயிருப்பதையெல்லாம் ஒரு மிக்கச் சேர்த்துப் பார்த்தால் மேரு ப்ரஸ்தாரத்தில் அங்கணம் அங்கணமாகக் கோணங்களில் எழும்புகிற ஸ்ரீ யந்திரரூபத்திலேயே அது இருக்கக்கூடும்" என்று கூறியிருக்கிருராம்!

இந்த உன்னதங்கள் இருக்கட்டும். இவற்றில் உள்ள உட்பொருளையே லேசாகத் தன்னுள் கொண்ட பகவானின் ஹாஸ்யம் ஒன்றைப் பார்ப்போம்.

பரமசிவனுக்கு ஜாதி ஏது, குலம் ஏது? இன்ன ஜாதி என்று தெரியாதவனுக்குப் பார்வதியைக் கொடுத்துவிட்டோமே என்று ஹிமவானுக்கு உள்ளூறக் குறையிருந்ததாம். அப்புறம் தேவி அருணசலத்திலே ஐக்யமாகிவிட்டாள் என்றபோதுதான் குறை தீர்ந்ததாம். 'ஓ, அவனும் அண்ணுமலையாகத்தானே இருந்திருக்கிருன்? அதனுல் ஸ்வஜாதிதான்' என்று திருப்திப்பட்டுக் கொண்டானும் ஹிமய மலையான்! ✻

---

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.

—திருவள்ளுவர்

பிறருக்கு உதவி செய்வதன் மூலம் நீங்கள் உங்கள் சுமையைக் குறைத்துக் கொள்ளலாம்.

—பிரான்ஸ் கொயஸ்

மற்றவர்களுடைய துன்பங்களை உணர முடியாதவன் மனித உருவத்திலுள்ள விலங்காவான்.

—ஜுவெனல்

நாம் சேர்த்து வைக்கும் உண்மையான சொத்துக்கள் நம்முடைய தர்மங்கள்தாம். நாம் எவ்வளவு கொடுக்கிரேமோ அந்த அளவுக்கே ஆதாயம் பெறுகிரேம்.

—ஸிம்ஸ்

கீழே விழுந்து கிடப்பவரைத் தூக்கி விடாதவன் எச்சரிக்கையாக இருக்கட்டும். அவன் வீழ்ந்து கிடக்கையில் எவரும் கைநீட்டி அவனை எடுக்க மாட்டார்.

—ஸாஅதி

வழிப்போக்கர்களும், ஏழைகளும் இறைவனுல் அனுப்பப் பெறுகின்றனர். இவர்களுக்கு நாம் கொடுப்பது இறைவனுக்கே அளிப்பதாகும்.

—ஹோம்

பிரார்த்தனை நம்மை ஆண்டவன் பாதையில் பாதி வழிகொண்டு செல்லும்; உபவாசம் அவனுடைய அரண்மனை வாயிலண்டை கொண்டு செல்லும்; தானதர்மங்கள் உள்ளே செல்வதற்கு அனுமதி பெற்றுக் கொடுக்கும்.

—ஒரு கீழை நாட்டுப் பழமொழி

உலோபி தன் சகோதரனுடைய உடலைப் பட்டினி போட்டுத் தன் ஆன்மாவை பட்டினி போடுகிருன். மரண காலத்தில், அநீதியால் வந்த தன் செல்வங்களை விட்டு, அவன் ஏழையாய், நிர்வாணமாய், துன்பத்தோடு செல்கிருன்.

—தியோடோர் பார்க்கர்

அருள்நெறிக் கதை:

# தனக்குத் தானே ஏற்படுத்திக் கொண்ட பந்தம்

ஆர். நிவேதிதா, எம். ஏ.

[இந்தக் கதை படித்து ரசிக்கக்கூடிய வகையில் நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் இதில் வரும் துறவியைப் போல அவ்வளவு கருணையோடு அத்தனைமுறை நடந்து வந்து நம்மைக் காப்பாற்றப்போவது யார் என்பது தான் தெரியவில்லை.]

ஓர் ஊரிலே ஒரு மிட்டாய் வியாபாரி இருந்தான். அவன் கடவுள்பக்தியும் கருணையுள்ளமும் கொண்டிருந்தான்.

அந்த மிட்டாய்க்காரனின் கடைதான் அந்தக் கிராமத்தில் பெரியதாகவும் சுத்தமானதாகவும் இருந்தது. அந்த வியாபாரி சாதுக்கள் யார் வந்தாலும் அவர்களை உபசரித்து அவர்களுக்கு வேண்டிய உணவளித்து மகிழ்ந்து வந்தான்.

ஒரு நாள் பகல் வேளையில் வழக்கம்போல் அந்த வியாபாரி கடையில் உட்கார்ந்திருந்தான். அப்போது வெயில் கடுமையாக இருந்தது. வெயிலில் நடந்து வந்த களைப்பில் சாது ஒருவர் அந்தக் கடையின் முன்னால் வந்து நின்றார். அங்கிருந்த நிழலில் சிறிது நேரம் நின்று அவர் களைப்பாறினார்.

பிறகு அந்தச் சாது, வியாபாரியிடம் தமக்குக் குடிப்பதற்குச் சிறிது தண்ணீர் தரும்படி கேட்டுக் கொண்டார். உடனே வியாபாரி இனிப்புப் பண்டங்கள் சிலவற்றுடன் குடிப்பதற்குத் தண்ணீரும் சாதுவிடம் கொண்டுவந்து கொடுத்தான். சாது அவற்றை உட்கொண்டு பசியாறினார்.

பிறகு வியாபாரி, "சுவாமிஜி, தங்களுக்கு ஏதாகிலும் உதவி வேண்டுமானால் சொல்லுங்கள், செய்து தருகிறேன்" என்று சாதுவிடம் அன்புடன் கேட்டான்.

அதற்குச் சாது, "அப்பா, என்னுடைய இந்தத் துணியில் கிழிசல்கள் அதிகமாக இருக்கின்றன. ஆகவே கொசுக்களின் தொல்லையால் நேற்று இரவு முழுவதும் என்னால் சரியாகத் தூங்கமுடியவில்லை. நீ இந்த ஆடையைச் சரிசெய்து கொடுத்தால் எனக்குப் பெரிதும் உதவியாக இருக்கும்" என்றார்.

மிட்டாய் வியாபாரி சன்னியாசிகளுக்குத் தொண்டு செய்வதைத் தன் பிறவிப் பயனாகவே நினைப்பவன். எனவே அவன் சாதுவிடமிருந்து துணியை வாங்கி உடனடியாக அப்போதே அதை சரிசெய்து கொடுத்தான். ஒரு சன்னியாசிக்குத் தொண்டு செய்வதற்குக் கடவுள் தனக்கு வாய்ப்பைக் கொடுத்தாரே என்று அவன் பெரிதும் மகிழ்ந்தான்.

அன்று இரவு துறவியால் அமைதியாகத் தூங்க முடிந்தது.

மறுநாள் அந்தச் சாது மிட்டாய்க்காரனின் கடைக்குச் சென்றார். அவர் மிட்டாய் வியாபாரியிடம் தன் நன்றியைத் தெரிவித்துவிட்டு, "அப்பா, நீ செய்த உதவியால் கொசுக்கடியிலிருந்து தப்பி நேற்று இரவு என்னால் அமைதியாகத் தூங்க முடிந்தது. அதற்குக் கைம்மாறாக நான் உனக்கு ஏதாவது உதவ விரும்புகிறேன். நான் உனக்குப் பொன்னும் பொருளும் தரக் கூடிய நிலையில் இல்லை. ஏனென்றால் நான் அவற்றை எப்போதோ துறந்துவிட்டவன். ஆனால் என் தவ வலிமையால் வைகுண்டத்திற்கு உன்னை என்னால் அனுப்ப முடியும். எந்த இடத்திற்குப் போக வேண்டும் என்று விரும்பி, ஞானிகளும் முனிவர்களும் பக்தர்களும் பல்லாண்டுகள் தவம் செய்கிறார்களோ அந்த வைகுண்டத்திற்கு உன்னை நான் அழைத்துக்கொண்டு போகிறேன். அங்கே செல்வதன் மூலம் பிறப்பும் இறப்பும் அல்லல்களும் இல்லாத முக்திநிலை உனக்குக் கிடைத்துவிடும்" என்றார்.

அதற்கு அந்த வியாபாரி, "சுவாமி, தாங்கள் என் மீது கொண்டிருக்கும் தூய அன்பினால் இப்படிப்பட்ட கிடைத்தற்கு அரிய பாக்கியத்தை எனக்குத் தருகிறீர்கள். ஆனால் நான் என்ன செய்வேன்? முனிவர்களுக்கும் தபஸ்விகளுக்கும் கிடைக்காத பெரும்பேறு எனக்குத் தங்களால் அருளப்பெற்றும் நான் அதைப் பெற்றுக்கொள்ள இயலாதநிலையில் இருக்கிறேன்! எனக்கு இரண்டு பையன்கள் இருக்கிறார்கள். இருவரும் வயதில் சிறியவர்கள். இன்னும் எட்டு வருடங்கள் கழித்துத் தாங்கள் வந்து என்னைக் கூப்பிட்டால் நான் தங்களுடன் வரத் தயாராக இருப்பேன். அப்போது என் பையன்கள் வளர்ந்து பெரியவர்களாகித் தங்களைத் தாங்களே கவனித்துக் கொள்ளும் நிலையில் இருப்பார்கள். தாங்கள் என் மீது கொண்டுள்ள அன்பிற்கும் கருணைக்கும் மிக்க நன்றி" என்று கூறிச் சாதுவை அனுப்பிவிட்டான்.

காலம் உருண்டோடியது. வியாபாரி குறிப்பிட்ட எட்டு ஆண்டுக் காலம் நிறைவுபெற்றது. துறவி மீண்டும் மிட்டாய்க்காரனின் கடைக்குச் சென்ருர். அவர் அந்த வியாபாரியிடம், ''அப்பா, என் நன்றியைத் தெரிவிக்க வந்திருக்கிறேன். நீ எட்டு வருடங்கள் கழிந்தபிறகு என்னுடன் வருவதாக முன்பு குறிப்பிட்டாய். நேற்ருேடு எட்டு வருடங்கள் முடிந்துவிட்டன. உனக்கு முக்தியைக் கொடுப்பதற்காக நான் இன்று வந்திருக்கிறேன்'' என்று கூறினுர்.

சாது அவ்விதம் கூறியதும் வியாபாரி அவரிடம், ''சுவாமி, தாங்கள் என்மீது கொண்டிருக்கும் கருணைக்கு நான் என்ன சொல்வது? தாங்கள் சொல்வதைப் போன்று தற்சமயம் என்னுல் நடந்து கொள்ள இயலாமைக்கு வருந்துகிறேன். என் பையன்கள் இப்போது மிகவும் கெட்டவர்களாகி விட்டார்கள். அவர்கள் குடிகாரர்களாகவும் பணத்தை வீண்செலவு செய்பவர்களாகவும் இருக்கிருர்கள். ஆகவே, நான் தற்சமயம் அவர்களையும் அவர்களுடைய சொத்துக்களையும் கவனமாகப் பாதுகாக்க வேண்டிய நிலேயில் இருக்கிறேன். அது காரணமாகத் தங்களின் கருணை உள்ளத்தின்படி தற்சமயம் நான் நடந்துகொள்ள முடியாதவனுக இருகின்றேன்! எனவே தாங்கள் தயைகூர்ந்து இன்னும் எட்டு வருடங்கள் கழித்து வந்தால் நான் அப்போதே தங்களுடன் புறப்பட்டு வரத் தயாராயிருப்பேன்'' என்று தெரிவித்துக் கொண்டான்.

சாதுவுக்கு அந்த வியாபாரியின்மீது அனுதாபம் தான் ஏற்பட்டது. 'இவன் நல்ல மனிதன்தான். ஆனுல் கடவுள்மீது இருக்க வேண்டிய பக்தியை விடத் தன் பிள்ளைகள்மீது இவனுக்குப் பந்தபாசம் அதிகமாக இருக்கிறது. புத்திரபாசம் என்ற பந்தத்தில் இவன் தன்னை நன்ருக இறுக்கிக் கட்டிக் கொண்டிருக்கிருன். இப்படிப்பட்டவனைப் பற்றற்ற பரமனிடம் எப்படி அழைத்துச் செல்வது?' என்று சாது தமக்குத் தாமே நினைத்துக்கொண்டார். இருப்பினும் அவர் வியாபாரியிடம், ''நீ சொல்வது போலவே இன்னும் எட்டு வருடங்கள் கழித்தே வருகிறேன்'' என்று சொல்லிவிட்டுச் சென்ருர்.

மேற்கொண்டு மிட்டாய் வியாபாரி குறிப்பிட்ட அடுத்த எட்டு ஆண்டுகளும் முடிவுற்றன. சாது, வியாபாரிக்குத் தாம் கொடுத்த வாக்கை நிறைவேற்ற மீண்டும் அந்தக் கிராமத்திற்கு வந்தார். ஆனுல் அங்கு அவர் முன்பு பார்த்த மிட்டாய்க் கடையோ, வியாபாரியின் வீடோ காணப்படவில்லை. அவை இருந்த இடத்தில் இடிந்து பாழடைந்து சத்திரம் போன்ற வீடு இருப்பதைச் சாது பார்த்தார். அங்கு அந்த வியாபாரியின் மூத்த மகன் சிறிய அளவில் பெயருக்கு ஒரு கடையை வைத்துக்கொண்டு வறுமையான முறையில் வியாபாரம் செய்துகொண்டிருந்தான்.

சன்னியாசி, கடையில் இருந்த மூத்த மகனை அணுகி வியாபாரியைக் குறித்து விசாரித்தார்; வியாபாரிக்கும் தமக்கும் இருக்கும் ஒப்பந்தத்தைப் பற்றியும் அவனிடம் கூறினுர்.

சாதுவிடம் வியாபாரியின் மூத்த மகன், ''சுவாமிஜி! அப்பா எங்களைக் கஷ்டத்தில் விட்டுவிட்டு இறந்து போய்விட்டார். அவரால்தான் எங்களுக்கு இந்த வறுமை நிலே ஏற்பட்டிருக்கிறது. நான் இந்தக் கடையை வைத்து ஏதோ ஒருவிதமாக நடத்தி வருகிறேன். என் தம்பி, அதோ அங்கே தெரிகிறது பாருங்கள், அந்தச் சிறிய வயலில் தானே உழுது விவசாயம் நடத்தி வருகிருன்'' என்ருன்.

அந்தத் துறவி எல்லாவற்றையும் அமைதியாகக் கேட்டார். பின்னர் அவர் தமது தவ வலிமையினுல் நடந்ததை ஞானதிருஷ்டியில் கண்டார். அந்த வியாபாரி இறந்துபோய், தன் குழந்தைகளிடம் வைத்த பாசத்தினுல் அந்தக் குடும்பத்திலேயே வயலே உழும் காளைமாடாக வந்து பிறந்திருக்கிருன் என்பதைச் சாது தமது ஞானதிருஷ்டியில் கண்டார். அந்த எருது இரண்டாவது மகனுக்கு வயல் வேலேகளில் உதவி செய்துகொண்டிருக்கிறது என்பதும் துறவிக்குப் புரிந்துவிட்டது. இரண்டாவது மகன் அந்த மாட்டை எப்போது அவிழ்த்துவிடுவான் என்று எதிர்பார்த்துச் சாது காத்திருந்தார்.

இரண்டாவது மகன் தான் பகலுணவு சாப்பிடச் சென்றபோது அந்த மாட்டை அவிழ்த்து மேய விட்டான்.

துறவி காளைமாட்டிடம் சென்று தம்மிடம் இருக்கும் புனித நீரை அதன்மீது தெளித்தார். அந்த மாட்டிற்குத் தமது தவவலிமையினுல் அதன் முற்பிறவியைப் பற்றிய நினைவைக் கொண்டுவந்தார். பின்னர் மிட்டாய்க் கடைக்காரனுகிய அந்த எருதிடம், ''மகனே, முன்பு உனக்கு நான் வாக்குறுதி கொடுத்தபடி எனது நன்றியைத் தெரிவிக்க வந்திருக்கிறேன். நீ குறிப்பிட்ட எட்டு வருடங்கள்

நேற்றோடு முடிந்துவிட்டன. உனக்கு முக்தியைக் கொடுப்பதற்காக நான் இன்று வந்திருக்கிறேன். என்ன, நீ என்னுடன் வரத்தயாராக இருக்கிறாயா ?" என்று சாது கேட்டார்.

முன் பிறவியின் நினைவு வந்ததும் அந்த எருது வடிவத்திலிருந்த வியாபாரி கண்களில் நீர்மல்க, "சுவாமிஜி, நான் கூறியபடியே தாங்கள் எட்டு வருடம் கழிந்தவுடனே வந்திருக்கிறீர்கள். ஆனால் நான் என்ன செய்வேன்?. இப்போது நீங்களே இந்தப் பையன்களின் வறுமை நிலையைப் பார்க்கிறீர்கள். இன்னும் இரண்டு வருடம் இவர்கள் இப்படியே வறுமையில் இருந்தால் பட்டினி கிடந்து சாகவேண்டியதுதான். ஆதலால் தயவுசெய்து தாங்கள் இன்னும் சில ஆண்டுகளுக்குப் பிறகு வந்து என்னை அழைத்துச் செல்லுங்கள். தற்சமயம் என்னை இவர்களுக்கு உதவ விட்டுவிடுங்கள்" என்றான்.

இவ்விதம் அந்த எருது—வியாபாரி சொன்னதைக் கேட்டதும் பந்தபாசத்தில் கட்டுண்டு கிடக்கும் அவன்மீது சாதுவுக்குக் கருணையே ஏற்பட்டது. தனக்குத் தானே ஏற்படுத்திக்கொண்டிருக்கும் பந்தபாசப் பிணைப்பைத் தகர்த்துவிட்டு வராமல் மயங்கி மருண்டு இருக்கும் அந்த ஜீவனை விடுவிக்க மேலும் சில ஆண்டுகள் கழித்து வருவதாகச் சொல்லிவிட்டுச் சாது சென்றார்.

சில ஆண்டுகள் கழிந்தன. துறவிக்கு முதுமை காரணமாக உடல் தளர்ந்துகொண்டே வந்தது. தமது நன்றியை வியாபாரிக்குச் செலுத்திவிட்டு எந்தவிதத்திலும் உலகிற்குத் தாம் கடன்படாமல் இருப்பதற்காகச் சாது மீண்டும் வியாபாரியின் வீட்டிற்குச் சென்றார்.

ஆனால் அங்கு அந்தப் பாழடைந்த இடிந்த வீட்டின் முன்னால் பசியால் வாடிக் கிடக்கும் ஒரு நாய் இருப்பதைச் சாது பார்த்தார். அந்த நாய் துறவியைக் கண்டதும் குரைத்து வீட்டிற்குள் இருப்பவரை வெளியே வரும்படி செய்தது.

நாயின் குரலைக் கேட்டு மூத்தமகன் வெளியே வந்தான். சாது அவனிடம் குடும்பத்தின் நிலையைப் பற்றி விசாரித்தார். பிறகு அவர்களுக்கு உதவி செய்துவந்த எருதைப் பற்றிக் கேட்டார்.

சாதுவிடம் மூத்த மகன், "சுவாமிஜி, அந்த எருது ஒரு வருடத்திற்கு முன்னால் இறந்துபோய் விட்டது. அந்த எருது எங்களுக்கு எவ்வளவு உதவியாக இருந்தது தெரியுமா? அது அதிகமாகச் சாப்பிடவே சாப்பிடாது. ஆனால் அது ஓய்வே இல்லாமல் எங்களுக்காக மிகவும் கடுமையாக உழைத்து வந்தது. பாவம், இறந்துவிட்டது. அப்படிப்பட்ட ஒரு மாடு இனி எங்களுக்குக் கிடைக்கவே கிடைக்காது" என்று அந்த எருதைப் பற்றிப் பலவாறு புகழ்ந்து பேசினான்.

தம்மைப் பார்த்துக் குரைத்த நாய்தான் இறந்து போன வியாபாரி; எருதாகப் பிறந்தபிறகு தன் வினை காரணமாக, அதாவது தன் பிள்ளைகளின் மீது வைத்த பந்தபாசம் காரணமாகவே இப்போது நாயாகப் பிறந்து தன் பிள்ளைகளைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறான்; தன் பிள்ளைகளுக்குத் துணையாகவும் அவர்களுக்குச் சொந்தமான எதையும் எவரும் எடுத்துச் செல்லாதபடியும் அவன் கவனித்துக் கொண்டிருக்கிறான் என்பதைச் சாது தெரிந்துகொண்டார்.

துறவி தம்மைப் பார்த்துக் குரைத்த நாயின் அருகில் சென்றார். தமது தவவலிமையினால் அவர் அந்த நாய்க்கு அதன் முற்பிறவியைப் பற்றிய நினைவை ஏற்படுத்தினார்.

பூர்வஜன்மத்தின் நினைவு வந்தவுடனே அந்த நாய் துறவியின் திருவடியில் கிடந்து கண்ணீர்விட ஆரம்பித்தது. பிறகு அது, "சுவாமிஜி, என் குழந்தைகளின் நிலையைத் தாங்களே பார்க்கிறீர்கள். அவர்கள்தான் எவ்வளவு கஷ்டத்தில் இருக்கிறார்கள், பாருங்கள். அதனால் இந்த நிலையில் நான் அவர்களை விட்டுத் தங்களுடன் வர முடியுமா? ஆகவே இன்னும் சிறிது காலம் கழித்துத் தாங்கள் வந்தால் உடனே அப்போதே தங்களுடன் நான் வந்துவிடுகிறேன்" என்று அழுதுகொண்டே கூறியது.

'இப்படி ஒரு ஜீவன் தன் பழவினையினால், பந்தபாசத்தினால் கட்டுண்டு, சம்சாரத்தில் சுழன்று சுழன்று வந்து அல்லல்படுகிறானே! தன் மனைவி; தன் மக்கள் என்ற அற்ப எண்ணத்தினால் ஏற்படும் பந்தங்கள் எல்லாவற்றையும் இவ்வளவு காலத்திற்குப் பிறகாகிலும் உதறிவிட்டு முக்தி அடைவதில் இவன் கவனம் செலுத்துவதாகக் காணோமே!' என்று சாதுவின் கருணையுள்ளம் அந்த வியாபாரியின் மீது இரக்கப்பட்டது.

பிறகு சாது, வியாபாரியாகிய நாய் கேட்டுக் கொண்டபடி சிறிது காலம் கழித்துத் தமது தள்ளாத வயதில் வருவதாகக் கூறிவிட்டுச் சென்றார்.

சிறிது காலம் கழிந்தது. துறவி மீண்டும் வியாபாரியின் பிள்ளைகள் வசித்து வந்த வீட்டுக்குச் சென்றார். முன்பு இருந்ததைவிடவும் மிகவும் மோசமான

நிலையில் அந்த இரண்டு பையன்களும் அவர்களின் குடும்பமும் இருப்பதைச் சாது கவனித்தார்.

பையன்கள் இருவரும் துறவியைக் கண்டதும் ஆத்திரமும் கோபமும் கொண்டார்கள். 'இந்தத் துறவி ஒவ்வொரு தடவையும் வந்து பார்த்துவிட்டுப் போகப்போக, நமக்கு மேலும் மேலும் மோசமான நிலைதான் ஏற்படுகிறது. ஆகவே இவர்தான் துரதிஷ்டத்தைத் தம்முடன் கொண்டு வருகிறார் போலிருக்கிறது' என்று நினைத்து அவர்கள் இருவரும் துறவியைத் திட்ட ஆரம்பித்தார்கள்.

ஆனால் துறவி மிகுந்த அமைதியுடன் கருணை ததும்ப, "குழந்தைகளே, நீங்கள் மிகவும் ஏழையாகி விட்டீர்கள். உங்களுக்குப் பணம் வேண்டுமா? அப்படியானால் உங்கள் பெற்றோர் வழக்கமாகத் தூங்குவதற்குப் பயன்படுத்திய இடத்தைத் தோண்டிப் பாருங்கள். அங்கு ஒரு ஜாடி நிறையத் தங்க நாணயங்கள் இருப்பதைக் காண்பீர்கள். அதை நீங்கள் இருவரும் எடுத்துக் கொள்ளுங்கள்" என்று சொன்னார்.

உடனே பையன்கள் இருவரும் தங்களின் பெற்றோர் உறங்குவதற்கு வழக்கமாகப் பயன்படுத்திய இடத்திற்குச் சென்று தோண்டிப் பார்க்க ஆரம்பித்தார்கள். சிறிது தோண்டியவுடனே அந்தப் பள்ளத்திலிருந்து ஒரு பாம்பு வெளியே வந்து சீற ஆரம்பித்தது. பாம்பைக் கண்டதும் அவர்கள் இருவரும் பள்ளம் தோண்டுவதை நிறுத்திவிட்டுக் கோபத்துடன் துறவியிடம் சண்டைக்குச் சென்றார்கள்.

துறவி அவர்களின் மனநிலையைப் புரிந்து கொண்டு, " நான் பொய் சொன்னதாக நினைத்துக் கோபப்படுகிறீர்கள். ஆனால் அந்தக் குழியை நன்றாகப் பாருங்கள், அதோ ஜாடியின் மேல்பகுதி ஒரு சிறிது தெரிகிறது. நான் சொல்வதைப் போலச் செய்யுங்கள். இந்தப் பாம்பை வெறுத்து அதை நீங்கள் இருவரும் அடித்துக் கொன்றுவிடுங்கள்" என்று கூறினார்.

பையன்கள் இருவரும் சற்றுக் கோபம் தணிந்து பள்ளத்தைக் கூர்ந்து கவனித்தார்கள். ஜாடியின் மேல்பகுதி என்று சொல்லத்தக்க ஒன்று, பாம்புக்கு அடியில் இருப்பது தெரிந்தது. பிறகு தங்கள் பலத்தை எல்லாம் ஒன்றுதிரட்டி அந்த ஜாடியை எடுக்க வேண்டும் என்ற வேகத்தில் அவர்கள் இருவரும் பாம்பை அடித்தார்கள். பாம்பு நன்றாக அடிபட்டு இறந்தது.

பையன்கள் பள்ளத்திலிருந்து ஜாடியை மேலே எடுத்தார்கள். நிறையத் தங்க நாணயங்கள் இருந்ததைக் கண்டு அவர்கள் எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்தனர்.

ஆனால் துறவி, அடித்து விசப்பட்ட பாம்பு இருந்த இடத்திற்குச் சென்று அதன்மீது புனித நீரைத் தெளித்தார். பிறகு வைத்த கண் வாங்காமல் அதையே பார்த்துக் கொண்டு நின்றார்.

முன்பு நாயாகவும் எருதாகவும் பிறவி எடுத்து மீண்டும் மீண்டும் பந்தபாசம் காரணமாக அதே குடும்பத்திற்கு வந்து சேர்ந்த மிட்டாய் வியாபாரி தான் இப்போது பாம்பாகப் பிறந்திருந்தான். தான் பாசம் வைத்திருந்த இரண்டு பிள்ளைகளின் கையாலேயே இந்தப் பிறவியில் அவன் அடித்துக் கொல்லப்பட்டதனாலும் துறவியின் பெருங்கருணையினாலும் மெல்ல மெல்லப் பந்தபாசம் அவனை விட்டு நீங்கியது.

துறவி தவவலிமையினால் தன்னை வைகுண்டத்திற்கு அழைத்துச் சென்று முக்திபெறச் செய்வதை அறிந்து அந்த வியாபாரி ஆனந்தமே கொண்டான்.

அர்த்தம் அனர்த்தத்தையே விளைவிக்கும். தன் பிள்ளைகளின்மீது கொண்டிருந்த பொருளற்ற பாசமே அந்த வியாபாரியை மீண்டும் மீண்டும் பிறவிகளுக்கு உட்படுத்தியது. பிள்ளைகளுக்கு உழைப்பதற்காகவே திரும்பத் திரும்பப் பிறந்து தன்னைப் பிணைக்கும் பந்தங்களை அவனாகவே மேலும் மேலும் ஏற்படுத்திக் கொண்டான். அவனுடைய அவிவேகமே அவனை மீண்டும் மீண்டும் பிறப்பிற்கும் இறப்பிற்கும் உட்படுத்தி அலைக்கழித்து வந்தது.

அந்த மிட்டாய் வியாபாரி பந்தபாசம் அற்ற நிலையில் தன் கடமை என்று மட்டும் உலக வாழ்க்கையை நடத்தியிருந்தால், ஒரே பிறவியில் துறவியின் கருணையினால் மரணமிலாப் பெருவாழ்வாகிய முக்தியை அடைந்திருப்பான்.

எனவே நாமும் நமக்கு வாய்த்த கடமைகளைப் பந்தபாசம் அற்ற நிலையில், தாமரையிலை நீர் போலப் பற்றுதல்களுக்கு உட்படாமல் வாழ முயல்வோமாக. அதற்கு உரிய மனநிலையையும் வலிமையையும் தந்தருளும்படி இறைவனை மனதாரப் பிரார்த்திப்போமாக.

* * *

சுவாமி இராமகிருஷ்ணானந்தர் தமது 'The Message of Eternal Wisdom' என்ற ஆங்கில நூலில் நாம் மேலே பார்த்த இந்த அருள்நெறிக் கதையை எழுதியுள்ளார். *

# தியான வேளையிலே....

எப்.ஜே. அலெக்சாண்டர்

1

இதயத்தின் உள்ளே நிலவும் ஆழ்ந்த நிச்சப்தத்தில் குருவின் குரல் பேசுகிறது :—

என் குழந்தாய்! ஜடப்பொருளாகிய இந்த உடல் எப்போது பார்த்தாலும் சைதன்னியமான ஜீவனுடன் போர் தொடுத்துக்கொண்டே இருக்கிறது! மிருகத்தனம் பொருந்திய இந்த உடலுக்கும் ஜீவாத்மாவுக்கும் எந்நேரமும் சதா போராட்டம் நடந்து கொண்டே வருகிறது. ஆகையினால் நீ எந்நேரமும் விழிப்புடன் இரு. வாழ்நாளோ ஓட்டையுள்ளது. வாழ்க்கைதான் என்ன மாயமாய், சாரமற்றதாக இருக்கிறது! புலன்களை நம்பாதே. அவைகள் இன்ப துன்பங்களால் அலைக்கழிக்கப்படுகின்றன. நீ அவற்றைக் கடந்து செல்! நீ ஆத்மன்! எந்த க்ஷணமும் இந்த உடல் வீழ்ந்து மடிந்துவிடும்! உண்மையில், அது விழ்ந்து மடியப்போகும் நேரம் எது என்று யாருக்குத் தெரியும்! ஆகவே உன் கவனத்தை அசைக்க முடியாதபடி இலட்சியத்தில் பொருத்தி வை. மேன்மைப்படுத்தும் உயர்ந்த எண்ணங்களால் உன் மனதை நிரப்பிக்கொள். உன் மனம் உயர்ந்த எண்ணங்களிலேயே ஊறித் தோய்ந்திருக்கட்டும். மரணத்தறுவாயில் அல்ல, உயிர் வாழ்ந்துகொண்டிருக்கும் இப்போதே உன் மனதைச் சுதந்திரமாகவும் பரிசுத்தமாகவும் வைத்திரு. அப்படியிருந்தால் திடீரென்று மரணம் உன்னைக் கைப்பற்றுமானால் நீ தயாராகவே இருப்பாய். இந்த க்ஷணமே நீ மரணமடையும் தறுவாயில் இருப்பதாக நினைத்து உன் வாழ்க்கையை நடத்து. இப்படிச் செய்தாயானால் அப்போதுதான் நீ உண்மையாக வாழ்வதாகும். காலம் பறந்தோடிக் கொண்டே இருக்கிறது. ஆனால் நீ சாசுவதமான, அழிவற்ற சிந்தனைகளில் ஈடுபட்டால், அந்தக் காலத்தையும் எல்லையற்றதாகவும் நிரந்தரமானதாகவும் இருக்கும்படி உன்னால் செய்துவிட முடியும்.

உன் ஆன்மிக இலட்சியங்களுக்கேற்ப இந்த உலகில் உன் வாழ்க்கையைச் சரியாக நீ நடத்தாமலிருந்தால், உன் உடல் வீழ்ந்து மடியும்போது நிச்சயமாக நீ பச்சாதாபப்படுவாய். 'ஆஹா நடத்தாமலிருந்தால்?' — என்ற இந்தச் சொல், அசட்டையையும் பின்னால் வருந்திச் செய்யும் சுய நிந்தையையும் குறிப்பிடும் மரணத்திற்கொப்பான நாசகரமான சொல்லாகும். "ஐயோ! உயிருடன் இருக்கும்போது நான் அதை மட்டும் செய்திருந்தால், அப்படி மட்டும் நடந்து கொண்டிருந்தால், இப்போது கடவுளுக்கு இன்னும் அருகில் இருந்திருப்பேனே!" என்று லக்ஷோபலக்ஷம் ஜீவர்கள் வருந்தி ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே இந்தக் கணத்திலேயே முழு மூச்சுடனும் உண்மையான சிரத்தையுடனும் உன் ஆத்மாவை இலட்சியத்தில் அமிழ்த்திவிடு. "பகவானே! உன் தெய்விகத் தரிசனத்தைப் பெறும்படி என்னைச் செய்வாயாக! என்னை நேர்மை உள்ளவனாக இருக்கச் செய்வாயாக! உன்னை அடைய வேண்டும் என்ற அருள்தாகம் காரணமாக ஏங்கிப் பரிதவிப்பவனாக என்னை இருக்கச் செய்வாயாக!" என்று கடவுளை நோக்கிப் பிரார்த்திப்பாயாக. எல்லாப் பக்தர்களுடைய மகத்தான அந்தப் பிரார்த்தனையை — "ஹே பிரபுவே! உன்னிடம் மட்டுமே நான் அன்பு செலுத்துவேனாக! உன்னிடமே என் பக்தி நிலைத்திருப்பதாக!" —என்று ஒவ்வொரு நாளும் உனக்கு நீயே சொல்லி நினைவுபடுத்திக்கொள்.

மனிதனின் ஜீவனுக்கு எல்லையற்ற சக்தி இருக்கிறது. நீ கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்று கேட்க எல்லையற்ற சக்தி உன்னிடம் கைகட்டிக் காத்திருக்கிறது. பரம்பொருளின் ஆத்மா போன்றவன் நீ என்பதை உணர்ந்து கொள். அவர் உனக்குள் வாழ்கிறார். அவர் உனக்குள் இருந்து இயங்குகிறார். அவரிடத்தில்தான் உன் ஸத்தையே அதாவது நீ இருக்கிறாய் என்பதே இருக்கிறது. இதை மட்டும் நீ அனுபவபூர்வமாக உணர்ந்துகொண்டுவிட்டால், எல்லாவித அச்சங்களும் உன்னைவிட்டு அகன்று நழுவிவிடும். நீ அச்சமற்ற பெருநிலையை எய்திவிடுவாய்.

## 2

ஜீவன் குருவின் குரலுக்குப் பதிலாகச் சொல்வதாவது :—

ஓ பிரபுவே! எல்லாவற்றுக்கும் காரணகர்த்தாவாகத் திகழ்பவரே! தங்களின் சொரூபம் எல்லையற்ற அன்பாக விளங்குகிறது! தாங்கள் எல்லா இடங்களிலும் வியாபித்திருக்கிறீர்கள். இந்த உணர்வு எனக்கு மிகமிகத் தீவிரமாக ஆகும்படி அருள்வீராக! இந்த உலகம் முழுவதிலும் தங்களைத் தவிர எனக்கு வேறு கதியே இல்லை! திகிலும் மரணத்தின் உருவங்களும் எங்கும் காணப்படுகின்றன. துன்பங்களும் மாயையின் பொய்த் தோற்றங்களும் நாலுபக்கங்களிலும் சூழ்ந்திருக்கின்றன—இதுதான் அழியும் தன்மையுள்ள வாழ்க்கையின் காட்சியாகும். ஆனால் தாங்கள் கிருபை கூர்ந்து இந்த மாயையை விலக்கிடுவீர்களாக! அவ்விதம் தாங்கள் என் மாயையை விலக்கிவிடுவீர்களானால், எங்கே மரணம் பதுங்கி என்னைப் பின் பற்றுமோ, எங்கே வாழ்க்கையே எனக்குத் துன்பமயமாக ஆகுமோ—அப்போது அங்கே நான் தங்களைத் தரிசிப்பேன்! பயங்கர வடிவத்திலும் நான் தங்களையே தரிசிக்கும்படி அருள் புரிவீராக! ஓ மாயையை அழிக்கும் கருணையின் வடிவமே, என் பிரார்த்தனைக்குச் செவிசாய்ப்பீராக!

## 3

குருவின் குரல் பதில் சொல்வதாவது :—

என் மகனே! கடவுளைக் கூவியழைப்பாயாக! எப்போதும் கடவுளையே கூவியழைப்பாயாக! அவரைப்பற்றியே, அவர் ஒருவரைப் பற்றியே சிந்தனை செய். எந்தச் சக்தி எல்லையற்று விளங்குகிறதோ அந்தக் கடவுளின் சக்தி உன்னைச் சுற்றிச் சூழ்ந்துகொள்ளும். எந்த அன்பு முடிவற்றதோ அந்தக் கடவுளின் அன்பு உன்னை அன்புடன் தழுவி அணைத்துக்கொள்ளும். எம்பெருமானாகிய பகவான் உன் ஆத்மாவுக்கு ஆத்மசாட்சாத்காரம் பற்றிய வாக்கியங்களைச் சொல்வார். கடவுளிடம் உண்மையாகவே சார்ந்திருத்தல் எல்லாவிதக் கஷ்டங்களையும் தீர்த்து வைக்கும். மனிதனை உண்மையான மனிதனாக்குவது என்பதற்கு உரிய வழிமுறைக்கிரமமானது கடவுளாகிய உன்னத அன்பில் முழுக்க முழுக்கச் சரணாகதி செய்துவிடுவதில்தான் அடங்கியிருக்கிறது. இது இடைவிடாமல் தொடர்ந்து செய்யப்படும் தடையற்ற தியானத்தில் வெளிப்படும்.

வாழ்வாவது மாயம், இது மண்ணாவது திண்ணம் என்று தெரியும்போது, வாழ்க்கையில் சூதுவாது வஞ்சனைகளைப் பார்க்கும்போது, மரணம் நேருக்கு நேர் வந்து நிற்கும்போது, இதயம் வேதனையினால் பிழிந்தெடுக்கப்படும்போது, இதற்கும் மேற்பட்ட துன்பம் கிடையாது என்று சொல்லத்தக்க வகையில் துன்பம் உச்சநிலையை அடையும்போது—இவையாவும் உடலைப்பற்றியவை, ஆத்மாவுக்கு இவற்றுடன் தொடர்பு கிடையாது, நீ ஆத்மா—என்று ஞாபகப்படுத்திக்கொள், ஞாபகப்படுத்திக் கொள்வதற்காவது முயற்சி செய். ஒவ்வொரு நாளையும் அதுவே உன் வாழ்க்கையில் கடைசி நாளாகப் பாவித்து நடந்துகொள். உன் வாழ்க்கையில் ஒவ்வொரு கணமும் இதை உன் ஜபமாகச் செய்துகொண்டிரு. நாள்தோறும் உன் வாழ்க்கையைக் கடவுளுக்கே அர்ப்பணம் செய். கடவுளின் இச்சையில் ஞானம் அடங்கியிருப்பதைப் பார். அப்படிச் செய்தால், ஒரு கொடும்புலியின் வாயில் நீ அகப்பட்டுக் கொண்டபோதும்கூட, மரணத்தின் முன்னிலையிலும்கூட, உன் நரகவாயிலிலும்கூட நீ கடவுளையே காண்பாய்.

'கடவுளை எப்போதும் நினைத்துக் கொண்டிருத்தல்' என்ற இதுவே உன் வாழ்க்கை முழுவதினுடைய உழைப்பாக இருக்குமானால், உன் ஆயுட்காலம் முழுவதும் நீ மேற்கொள்ளும் முயற்சியாக அமையுமானால், அப்போது எல்லையற்ற மகத்தான பேரானந்தமும் ஒப்புயர்வற்ற மேலான சாந்தியும் உன்னை வந்தடைந்து உன்னிடம் நிலைத்திருக்கும். அந்த நிலையில் எது இப்போது அவலட்சணமாகத் தோற்றமளிக்கிறதோ அதுவே அழகு ததும்புவதாக மாறிவிடும் ; எது இப்போது பயங்கரமாகத் தோன்றுகிறதோ அதுவே அன்புமயமாக மாறிவிடும். நல்லபாம்பால் தீண்டப்பட்ட ஒரு மகான், "இதோ பார்! இதோ பார்! என் அன்பனாகிய கடவுளிடமிருந்து ஒரு தூதுவன் வந்திருக்கிறான்!" என்று மகிழ்ச்சியோடு கூறியதைப் போல, நீயும் ஆனந்தக் கூச்சலிடுவாய். அல்லது மற்றொரு மகான் புலி வாயில் அகப்பட்டுக்கொண்ட நிலையிலும், "சிவோஹம்! சிவோஹம்!" என்று கூறியதைப் போல, நீயும் ஆனந்தத்தோடு கோஷிப்பாய். இதுதான் ஆத்மாவின் வலிமை. உண்மையில் இந்த வலிமைதான் ஆத்மாவின் பிரத்தியட்ச நிதர்சனமாகும். இது தெய்வசக்தியே ஆகும். ஏனெனில் இது தெய்விக சாட்சாத்காரமேயாகும்.

தாய் நாட்டைப் பாதுகாப்பதற்காகப் போர்வீரன் பீரங்கியின் வாய்க்குள் விரைந்து பாய்கிறான். தன்

குழந்தையைக் காப்பதற்காகத் தாய் நெருப்பில் ஓடி விழுகிறாள், தண்ணீரில் குதிக்கிறாள், புலியின் வாயிலும் போய் நுழைகிறாள். நண்பன் தன் நண்பனைக் காப்பாற்றுவதற்காக உயிர் துறக்கிறான். அதுபோலவே தன் இலட்சியத்தை அடைவதற்காகச் சன்னியாசி எல்லாவிதக் கஷ்டங்களையும் தாங்கிக் கொள்கிறான். நீயும் சோதனைகளையெல்லாம் பொறுத்துக்கொள்வாயாக; அபாயங்களையெல்லாம் எதிர்த்து நிற்பாயாக; இலட்சியங்களுக்கே இந்த வாழ்க்கை என்ற வாழ்க்கையை நடத்து; கடவுளின் பெயரால் எதற்கும் அஞ்சாமலும் தைரியமாகவும் அச்சமற்றும் இருப்போமாக. நீ என்னுடைய குழந்தை. சாவிலோ வாழ்விலோ, பாவத்திலோ புண்ணியத்திலோ, இன்பத்திலோ துன்பத்திலோ, நல்லதிலோ கெட்டதிலோ நீ எங்கெல்லாம் இருக்கிறாயோ அங்கெல்லாம் நான் உன்னுடனேயே இருக்கிறேன்; உன்னைப் பாதுகாக்கிறேன்; உன்னிடம் அன்பு கொண்டிருக்கிறேன். ஏனென்றால் நான் உனக்குக் கடமைப்பட்டவன்; உன்னோடு சேர்த்து நான் பிணைக்கப்பட்டிருக்கிறேன். கடவுளிடம் நான் கொண்டிருக்கும் அன்பு உன்னுடன் என்னை ஒன்றிப்போகும்படி செய்கிறது. நான் உன்னைக் காப்பாற்றுகிறேன்! நான் உன்னை நேசிக்கிறேன்! நான் உன்னிடம் அன்பு பூண்டிருக்கிறேன்! உன்னுடைய ஆத்மாதான் நான். குழந்தாய், உன் இதயம்தான் என் வாசஸ்தலம்!

ஹரி : ஓம் தத் ஸத்! ★

---

[91-ஆம் பக்கத் தொடர்ச்சி]

❋ ❋ ❋

வாழ்க்கை அநித்தியமானது. மூடர்கள் அதை நித்தியம் என்று நினைத்து ஏமாறவும் வாழ்க்கையில் சிக்கிக்கொண்டு தத்தளிக்கவும் செய்கிறார்கள். ஒவ்வொரு நாளும் சூரியன் உதிக்கிறது, அஸ்தமிக்கிறது. ஓர் உதயமும் ஓர் அஸ்தமனமும் நடந்தால் ஒரு நாள் போயிற்று. அத்துடன் கூடவே நாளுக்கு நாள் நம்முடைய வாழ்க்கைக் காலமும் குறுகி வருகிறது. பிறர் மூப்படைவதையும் இறந்துபோவதையும் பார்த்துக்கொண்டே இருக்கிறோம். என்றாலும், அதே கதிதான் நமக்கும் வரப்போகிறது என்பதை நாம் உணர்வதே இல்லை.

❋ ❋ ❋

சேர்த்துக் குவித்து வைக்கும் பொருள் கரைந்தும் குறைந்தும் அழிந்துவிடுகிறது. மேடான இடம் இடிந்தும் விழுந்தும் பள்ளமாகிவிடுகிறது. ஒன்றாகக் கூடிச் சேர்ந்த பொருள்கள் பிரிந்தும் தனித்தும் முடிவு பெறுகின்றன. வாழ்க்கை மரணம் காரணமாக இல்லாமல் ஒழிந்து போகிறது.

❋ ❋ ❋

பழுத்துக் கனிந்த பழம் தரையில் விழுந்துதான் தீர வேண்டும். அதுபோல, பூமியில் பிறந்த மனிதன் அழிந்துதான் ஆக வேண்டும்.

❋ ❋ ❋

தன்னைப் பொறுத்த வரையில் இரவும் பகலும் சதாகாலமும் வந்து போய்க்கொண்டே இருக்கும்; தன்னுடைய தினசரி வாழ்க்கை நீடித்தபடியே இருக்கும் என்று மூடன் நினைக்கிறான். புலனின்பங்களில் மூழ்கியுள்ள அவன் காலத்தின் போக்கை உணர்ந்துகொள்வதில்லை.

❋ ❋ ❋

உறுதி வாய்ந்த தூண்கள் தாங்கி நிற்கும் கட்டிடமும் காலக்கிரமத்தில் பாழடைந்து இடிந்து விழுந்து விடும். அவ்விதமே மனிதனும் நாளடைவில் மூப்புக்கு ஆளாகி, மரணத்தின் வாயில் சிக்கி மறைந்து விடுகிறான்.

❋ ❋ ❋

கடந்து போன இரவு மீண்டும் திரும்பி வருவதில்லை. புனித கங்கை நதி தன் நீரையெல்லாம் கடலில் கொண்டுபோய்ச் சேர்க்கிறது. ஆனால் அது தன் போக்கை ஒருநாளும் மாற்றிக்கொண்டு எதிர்த் திசையில் உற்பத்தி ஸ்தானத்தை நோக்கிப் பாய்வதில்லை.

❋ ❋ ❋

பூமியில் வாழும் எல்லா உயிர்களும் மரணத்திற்கு உட்பட்டவையே ஆகும். அந்த உயிர்களின் மீது பகலும் இரவும் உருண்டு சென்றபடியே இருக்கின்றன. அவற்றின் உயிரைக் காலம் விரைவில் கொள்ளைகொண்டுவிடுகிறது. கோடைக்காலத்தில் குட்டை குளங்களில் இருக்கும் நீரைச் சூரியனுடைய கிரணங்கள் வற்ற அடிப்பதைப் போலவே காலம் உயிரை வற்றச் செய்கிறது.

❋ ❋ ❋

நீ அசையாமல் நின்றாலும் அசைந்து சென்றாலும் உன் வாழ்நாள் குறைந்து கொண்டே வருகிறது. ஆகவே உனக்காகத்தான் நீ துன்பப்பட்டு வருந்த வேண்டும். வேறு எதற்காகவும் வருத்தப்பட வேண்டாம். ❋




# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை - 600 004

## 1980 மார்ச் மாத நிகழ்ச்சிகள்

ஸ்ரீராம கிருஷ்ண-விவேகானந்த பக்தர்களின் கூட்டம் (காலை 9 மணிமுதல் இரவு 9 மணிவரை)
காலை 9-30 மணிக்கு தலைவர் : சுவாமி தபஸ்யானந்தர்
விழா துவக்கம் : திரு தி. சு. அவினாசிலிங்கம்
மாலை 6 முதல் இரவு 8 மணி வரை அருண்மொழியரசு திருமுருக கிருபானந்த வாரியார் அவர்களின் இன்னிசைச் சொற்பொழிவு 'பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்' என்ற தலைப்பில் நடைபெறும்.

ஒரு நாள் முழுவதும் நடைபெற இருக்கும் இந்த விழாவில் தமிழ்நாட்டிலுள்ள ஸ்ரீராமகிருஷ்ண மடங்களைச் சேர்ந்த சுவாமிகளும், பல பக்தர்களும் கலந்து கொள்வார்கள்.

❋ ❋ ❋

சத்சங்கம் : ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை
9-3-80 1. ஸ்ரீமத் பாகவதம்—திரு 'அண்ணா' சுப்ரமண்யம்
16-3-80 2. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்—திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள்
23-3-80 3. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்—திரு வி. எஸ். வி. குருசுவாமி சாஸ்திரிகள்
மாலை 5-35 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி கபீரானந்தர் அவர்கள் ஸ்ரீமத் பகவத்கீதை என்ற தலைப்பில் மார்ச் 9, 16, 23 ஆகிய தேதிகளில் ஆங்கிலத்தில் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள்.
1-3-80 சனிக்கிழமை : ஸ்ரீசைதன்ய ஜயந்தி
2-3-80 ஞாயிறு : ஸ்ரீசைதன்ய ஜயந்தி பொதுக்கூட்டம்
மாலை 5 மணி முதல் 7 மணிவரை தலைவர் : சுவாமி தபஸ்யானந்தர்
பேசுபவர் : சுவாமி கமலாத்மானந்தர்
25-3-80 செவ்வாய்: ஸ்ரீராம நவமி
30-3-80 ஞாயிறு ஸ்ரீராம நவமி பொதுக்கூட்டம்
மாலை 5 மணி முதல் 7 மணி வரை தலைவர் : சுவாமி தபஸ்யானந்தர்
பேசுபவர் : டாக்டர் என். வீழிநாதன்
வாரநாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-45 மணிக்கு)

1. திங்கள் — ஸ்ரீராமகிருஷ்ண கதாமிர்தம் —சுவாமி அமிர்தானந்தர்
2. செவ்வாய் — பக்தியோகம்—சுவாமி கபீரானந்தர்
3. புதன் — முண்டக உபநிஷதம் —சுவாமி அமலாத்மானந்தர்
4. வியாழன் — விவேக சூடாமணி —திரு. 'அண்ணா' சுப்ரமண்யம்
5. வெள்ளி — ஆன்மிக வாழ்க்கை—சுவாமி கமலாத்மானந்தர்
6. சனிக்கிழமை (1-3-80 மட்டும்) — அத்யாத்ம இராமாயணம்—திரு. பி. ராமகிருஷ்ணன்
7. சனிக்கிழமை (22 & 29 தேதிகளில் மட்டும்) — வால்மீகி இராமாயணம்—டாக்டர் என். வீழிநாதன்

விசேஷ தினங்கள்:
3-1-80 & 27-1-80 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.
2-3-80 இரவு 7 மணிக்கு சியாம நாம சங்கீர்த்தனம்
6-3-80 ஸ்ரீமத் சுவாமி யோகானந்தஜி ஜயந்தி
9-3-80 இரவு 7 மணிக்கு ஸ்ரீராமகிருஷ்ண நரம சங்கீர்த்தனம்
16-3-80 இரவு 7 மணிக்கு ஸ்ரீசாரதா நாம சங்கீர்த்தனம்

வேறு சில நிகழ்ச்சிகள்:
9-3-80 மாலை 5-30 மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள் என்ற தலைப்பில் சுவாமி கீர்த்திதானந்தர் அவர்கள் உரை நிகழ்த்துவார்கள். இடம் : 7, கெல்லீஸ் ரோடு, கீழ்ப்பாக்கம்
மாலை 6-15 மணிக்கு சுவாமி ராகவேசானந்தர் அவர்கள் 7, 14, 21, 28 ஆகிய தேதிகளில் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணமும், பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் என்ற தலைப்பில் சொற்பொழிவும் நிகழ்த்துவார்கள். இடம் : 18, 9-ஆவது லேன், சாஸ்திரி நகர்

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தலைவர்,
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600 004

60—3 March 1980 SRI RAMAKRISHNA VIJAYAM Regd. No. M. 1520



வெளிநாடுகளுக்கு ஆண்டுச் சந்தா விவரம்: இலங்கை (இந்திய நாணய மதிப்பில்)—ரூ. 14 யு.எஸ்.ஏ. $ 5 பிற நாடுகள் £ 2·5 ஆயுள் சந்தா: யு.எஸ்.ஏ.—$ 70 பிற நாடுகள் £ 35.

தனிப் பிரதி உள்நாடு ரூ. 1-20